உ

குருவே துணை.

# கௌமார முறமை

சிரவணபுரம் கௌமாரமடாலயம்

தவத்திரு. சுந்தரசுவாமிகளுக்கு

பழனியில் நடைபெற்ற

# பட்டாபிஷேக நினைவுமலர்



9-2-'64

ஆசிரியர்

திருவாமாத்தூர் - கௌமாரமடாலயம்

தவத்திரு, தண்டபாணி சுவாமிகள்

---

1964

விலை 0-50.

உ

குருவே துணை.

# கௌமார முறைமை நூல்.

கருமம் - பக்தி - ஞானம் என்னும் மூன்று காண்டமுடையது.

---


இயற்றியவர்:

திருவாமாத்தூர் - கௌமாரமடாலயம்

மகான். வண்ணச் சரபம்

திருப்புகழ் சுவாமிகள். முருகதாச சுவாமிகள்

எனவழங்கும்

**அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்.**


---


1964

# பதிப்புப் பாயிரம்

---

**சிரவணபுரம் கௌமார மடாலயம்**
**சுந்தரசுவாமிகள் இயற்றிய**

வெண்பா.

கொங்கில் அணிநீடும் கோவைப் பதிக்கருகில்
தங்கு கணபதிப்பேர் சார்நகரில் - பொங்குபுகழ்
துன்னும் இரும்புருக்குத் தோயுந் தொழில்வளமை
மன்னுறச்செய் யும்மேல வன்.

வெளிநாடு சென்றுகற்ற மெய்த்தொழில்நுட் பத்தின்
தெளிவோன், பல் லாயிரவர்ச் சேர்ந்துக் - களிமேவ
ஆதரிக்கும் பண்போன், அறச்செயல்கள் இன்புறச்செய்
மேதகைநற் சிந்தையனும் மெய்.

தன்னடக்கன், ஆத்திகத்திற் சாரு மனத்தூயன்,
பன்னருட்கௌ மாரமுறைப் பாட்டமைநூல் - நன்னயமார்
புத்தகம தாக்கியப் புலவர் பத்தர் கொள்ளநல்கும்
வித்தகன்சீர் வாழ்க மிக.

துங்க மலிசிரவை தோய் திருமடத்தின் அன்பர்சொல்
தங்கருத்தி லேற்றச்சிற் சார்வித்துச் செங்கனகச்
சீருடனே கல்விநலம் சேர்பால சுந்தரமாம்
பேருடையான் பெற்றனனற் பேறு



நூலாசிரியர்:
தவத்திரு. **தண்டபாணி சுவாமிகள்.**

உ
குருவே துணை

# முன்னுரை

### வெண்பா

சரியை கிரியையுடன் சார்யோக ஞானப்
பரிவு தரும்கருமம் பத்தி-தெரிஞானம்
தன்னைக்கெள மாரமுறைச் சாத்திரத்தி னிற்பகர்ந்தான்
பன்னுதண்ட பாணிப் பரன்.

**கௌமாரம்** என்ற சொல், குமார வழிபாடுசெய்யும் நெறியினது என்ற பொருளையுடையது. சிவகுமாரனைத் தோற்றிய முருகக்கடவுளை முழுமுதற் பொருளாகக்கொண்டு, வழிபாடு, செப தியானம் இவற்றை உறுதியுடன் செய்து, அவன் அருட்பேற்றுக்கு உரியவராவார், கௌமாரர் எனப்பெறுவர். சிவவழிபாடு செய்வோர் சைவர், அறநெறி சைவம் என்றும், சத்திவழிபாடு சாத்தேயம், கணபதி வழிபாடு காணுபத்தியம், விஷ்ணு வழிபாடு வைணவம் சூரிய வழிபாடு சௌரம், என்றும் ஆனாற் போல, குமார வழிபாடு கௌமாரமாயிற்று.

சிவகுமாரன் முருகன் என்ற புராண வரலாற்று முறையில் தொடங்கி, உபாசனை முதிரமுதிர, படிப்படியாக அநுபவமேலீட்டினால்; அகண்ட பரம்பொருளே முருகக்கடவுள், சமயங்கள் யாவும் வேறல்ல, இதன் அங்கமேயாவும் என்ற பெருநிலையான, சமரசவுணர்வு வரும். இதனை

சிவன்மக னெனவே தொழுமெனுட் குகவேள், அன்னவன் செய்தவப்பேருய்
அவனது குருவாய்ச் சமயமு மிரண்டும் முகங்களென் றவிர் பொது முதலாய்,
நுவல்திசை யாறும் அவைகளாகக் காட்டிவிகற்ப மென் பவையெலாம் நூறித்
தவபல மொன்றே சத்திய மென்னும் தன்மையுந் தெரித்தனன், அன்றே

என்பர் இந்நூலாசிரியரான ஸ்ரீ தண்டபாணிசுவாமிகள், தமது நூல் வேறு ஒன்றில். தான்பெற்ற அநுபூதிமுறையை இக்கவிமூலம் விளக்குகின்றார்.

இந்நூலில், கௌமார சமயத்துக்குரிய முருகக் கடவுளின் வழிபாடு தியான உபாசனை முறைகளை மட்டும் கூறினரில்லை, மேற்கூறிய அறு வகை மூர்த்திகட்கும் உரிய, மந்திரம், யந்திரம், உருவநிலைகள், வழி பாட்டு முறைகள், ஆதியவற்றையும் முதலாவதான **கருமகாண்டத்திற்** கூறு கின்றார். கருமம் என்பது தொழில். அது பலவகைப்படுமேனும், உயிர்க்குறுதி தருவதான கடவுள் வழிபாட்டுக்குரிய தொழிலேயே நற் கருமம் என்று கொள்ளவேண்டும். சரியை-கிரியை என்ற இரண்டும் இதில் அமையும் என்று விளக்குகின்றார்.

இரண்டாவது **பக்தி காண்டம்** இது உபாசகன், மனம் ஒருவழிப்பட்டு. மூர்த்தியின் உருவத்தியானம்; மந்திரசெபம், புரியும் வகையைக்கூறும், தியானத்துக்கு, மூர்த்திகளின் உருவநாட்டமே உயர்வு. இதன் முதிர் வில், தானகவே அநுபூதியில் அருவநிலைவரும். அப்போதும், உருவத் தியானத்தைவிடக்கூடாது. அதனல் உடலுக்கு ஊறுவருவதலும் கூடும் என்பதைச் சான்றுடன் விளக்குகின்றார். அருவ அநுபவம் வந்தவுடன், நான் பிரம்மம். உலகம் மாயை என்று வாயளவிற்பேசுவது உபா சனைக்கு முற்றிலும் மாறுபட்டது, மூர்த்தி வடிவக்காட்சி, அருளுரை ஆதிய நேரும்போதும் மனமகிழ்ச்சியுற்று இறுமாப்பு வரலாகாது, அதனல் முயற்சி குறையும், அநுபவங்களும் மாறிவிடும் என்பன போன்ற பல கட்டுப்பாட்டு நெறிகளைத் தமது அநுபவத்திற்கண்ட முறைப்படி தெளிவுறக்கூறுகின்றார் ஆசிரியர்.

மூன்றாவது **ஞான காண்டம்**. ஞானம்–அறிவு. அறிவு–இறையுணர்வு. முற்கூறியமுறையில், சமயப்போராட்டமின்றி; ஒரு தெய்வத்தை உறுதி யுறக்கொண்டு உபாசிப்போர், முதிர்ந்த அநுபூதியில், மற்ற சமயத்தை யும் சமரசமாக ஏற்று, அந்தந்தச் சமயத்தாருக்கும் பொதுப்பட விளங்கி தெய்வவடிவையும் (சாரூப நிலையை) எய்தி விளங்குவர். அக்கால் உலகத்துக்கு வேண்டிய நன்மைகளைத் திருவருட்சித்தி வல்லமையால் செய்தல் கூடும். அப்படி உலக நன்மை கருதாமல், தன் உயிர்மட்டும் இன்பமுத்தி பெற்றுற்போதும் என்று இருந்துவிடக்கூடாது. இன்னர் இன்னசெயலால் உலகநன்மை செய்தார் என்பதை எடுத்துக்காட்டித் தெரிவிக்கின்றார். அன்றியும், எந்தச் சமயத்தைக் கைக்கொண்டாலும் முடிவில் எல்லாம் ஒன்றென்ற சமரச ஞானத்தை அது தரும். " முடிவில் ஏகந்தான் " என்கின்றார்.

தான் வேறு – கடவுள் நிலைவேறு என்ற பேதமற்ற ஞானுநுபவம் வந்த தன் அநுபவமொன்றைத் தாம் இயற்றிய "நானிலைச் சதகத்திற்' கூறுகின்ருர்.

"யானுமொரு மூர்த்தியெனத் தெரிந்து கொண்டேன்
இந்நிலையிற் சகுணபத்தி யினைக்கை விட்டு
வானுருவ மாக்கருதிக் கெட்டார் பல்லோர்" என்பதாம்

அன்றியும் இந்நூலில், உபாசகனது மனவெளியில், முன்னிலைப்படுகின்ற மூர்த்தி வடிவம், நனவிலும் சிலசமயம் தோன்றிமறையும், சற்றுநேரம் நின்று அருளுரை வழங்கியும் மறையும். அந்நிலை உபாசனையின் உறுதிக்கும் பற்றுக்கும் ஏற்ப அமைவதாகும். இந்த அளவு தனக்கு அநுபவமுண்டு எனவும் கூறுகின்ருர்.

"கண்ணெதிரிற் சாக்கிரத்திற் ருேன்றும் தெய்வம்
கணப்பொழுதில் வெளியிடத்திற் கலக்கும் சின்னுள்
அண்ணல்பதத் தாணையெனக் கிந்த மட்டும்
அநுபவமுண்டு" எனக்கூறினுரேனும்

அதனுல்தான் முழுதும் மகிழ்ந்து செருக்குறவில்லை, வேண்டும்போது அழைத்தால் முன்வரவும், போகச்சொன்னபோது மறையவும் வேண்டும். அதுவரை சலியாமல் உழைப்பு வேண்டும் என்ற தன் கருத்தைக் கூறுமுறையில் இந்நூல் பக்தி–22ல் விளக்குகின்ருர். மூர்த்தி சாரூபநிலையைப்பெற்ற உபாசகன், அந்தமூர்த்தியாகவே உலகம் போற்ற விளங்குவான். இந்நிலையோர், சொரூபசித்தர்கள். நெருப்பிற்காய்ந்த இரும்பு நெருப்பாகி, அதன் செயலைச்செய்வதுபோல, இறையருள் பெற்ற உயிர் இறைவன் செயலைப்புரியும் ஆற்றலைப்பெறும் என்றும் அவர் குமாரத்தன்மையுடையோர் என்று கூறுகின்ருர். வரலாறுகள் இவ்வினத்தைச்சாரும்.

தூலவுடலைவிட்டுச் சூக்குமமாக உயிர்முத்தியிற்சேரும் என்ற கருத்து, குமாரதேவர் நூலில் மறுக்கப்படுகிறது. உடலோடுமுத்தி சேருவதே சாயுச்சியமென்ற சிறப்புடையது என்ற அந்நூற்கருத்தை ஏற்றுக் கூறுகின்ருர். அது பெத்தான் சாம்பனுக்கு உமாபதியார் கொடுத்தது போல்வதாகும். ஆனுல் உலகமக்கள் தொடர்ந்து வழிபாடுசெய்து, உய்வதற்கேற்றமுறையில், திருவருட் குறிப்பின்படி திருமேனியை

வைத்து, திருவருளோடுசேரும் பெரியோர், வினையில் நீங்கி விளங்கிய தெய்வ இயல்புடையவர்கள் அவர்கள். எப்படியும் செய்யவல்லவராவர். அது சிறப்பிலக்கணம். வினைவசப்பட்ட உயிர்களின் உடல் வீழ்ச்சி அது அமையாது.

காண்டம் . பகுதி – மூன்று காண்டம் ஆகிய இந்நூலை, காண்டம் ஒன்றுக்கு நூறு பாடல் வீதம், கருமம்-பக்தி–ஞானம் என்ற முப்பகுதிக்கு முந்நூறு பாடலில், தமது நீண்ட உபாசனை, ஆராய்வு, அநுபவம், முன்னோர் நூற்கருத்து இவைகளைக்கொண்டு இயற்றியுள்ளார். தியானுநுபூதி என்ற நூல், முப்பத்துமூன்று பாடலிலும், நானிலைச்சதகம் நூறு பாடலிலும், தொகை, வகையாகக்கூறி, இந்நூலில் விரி என்ற முறையில் விளக்குவதாயினர். தனக்கு முன்னிலையாகத் தோன்றி, உபதேசித்த சற்குருவடிவம், சாதாரண மக்களை ஒத்ததென்றெண்ணுமல், தெய்வத்தின் அருள்வடிவாக நம்பவேண்டுமென்பதை முடிந்த நிலைபாகக் கூறுகின்ருர். சொருபானந்தர் தத்துவராயரைப்போன்றவரது மேல் நிலை இதுவாகும். மாயாவாதக்கொள்கையைப் பலஇடத்துங்கடிந்து கூறுவது காணலாம். வாயளவிற் பேசித்திரிவது இம்மைக்கும் மறுமைக்கும் பயனற்றதாம்.

வந்தாள் குரவன் மனிதனே ஆயினும்என்
சிந்தாய் அனைத்துமவன் செல்வமே-எந்தாயென்(று,
ஏத்திக் கருதில் இவனுகத் தோன்றும்: ஒன்று;
சாத்திரங்கள் கூறல்இதே தான்.
மாதா வயிற்றகத்தும் வன்சுவைய ஊண்அளித்த
தாதா ஒருவனே சற்குரு என்ற கருத்துப்படக் கூறுகின்ருர்.

ஞானபாத இலக்கணநிலை, உலகமக்கட் கெட்டாது. உபாசனையில் முயன்று அநுபவமடைந்தோர்க்கு விளங்குவதாம். முதலில், உபாசனைக்குத் தொடங்கும் அன்பர்கட்கேற்ற முறையில், சண்மதமூர்த்தி வழிபாடு. அவற்றின் மந்திரம், யந்திரம், விரதநாள், வழிபட்டுப் பேறுபெற்ருேர் விவரம் ஆதியவற்றைக் கூறுவதால், அந்நிலைக்கண் விருப்பமுடையவர்கட்குப் பெரிதும் இந்நூல் ஏற்றதாகும்.

சண்மதங்களைப்பற்றிக் கூறினுலும் ஆறுசமயத்துக்கும் ஏத்த வரலாற்ருேடு இயைத்துக், குமாரஇலக்கணத்தை விளக்கி, அவ்வழிபாட்டின்

மூலம் கௌமாரப்பண்பை உபாசர்க்கமைத்து, தெய்வ உபாசனை உடையார் யாவரும் கௌமரத் தொடர்பினரேயென்று, ஒருசேரத்தழுவும் பெருந்தன்மையைச் சுவாமிகள் கருத்திற் கொண்டிருப்பதை யாரும் அறிந்து போற்றற்பாலதாம். கொலை-புலை உடையவர், கோயிலிற் கொலை புலை செய்வோர், யாகத்திற்கொலை புரிவோர் இவர்களைமட்டும் ஆங்காங்கும் கடிந்து கூறுவர். அதை உலகில் இல்லாமற் செய்வதொன்றே முக்கியமாகக் கொண்டனர் சுவாமிகள்.

இந்நூலாசிரியரான சுவாமிகள், எல்லாச் சமயமூர்த்திகளும், பரம்பொருள் ஒன்றினின்றும் தோன்றிய வடிவங்களென்ற உண்மையை அநுபவமாக அறிந்திருப்பினும், முன்னைய தொடர்புக்கேற்ப முருகப்பெருமானையே இளமை முதற்கொண்டு, உபாசனை வழிபாடுசெய்து, அவனருளால் பல காட்சிகள் பெற்று, பல அருளுரைகள் வினவி, சமரச ஞானம் கைவரப்பெற்றவர். ஆகவே முருகனை முதற் பொருளாகக் கொண்டு மற்றவற்றை அதன் அங்கமாகத் தழுவினர். இக்கருத்தை இந்த முன்னுரையில் காட்டப்பெற்ற "சிவன் மகன்" என்ற பாடல் அறிவிக்கும். இந்நூல் கருமகாண்டம் 45, 46-வது கவிகளைக் காண்க.

"**குருவாயருவாய் அருள்வாய் குகனே**" என்ற கந்தர் அநுபூதிப் பாடலின்படி குருத்துவமுடையவன் குமரப்பெருமான். ஆதலின் பெருமான் இவருக்குப் பலதடவைகளிற் காட்சிவழங்கி அருள்செய்தான் என்ற விவரம், தம் வரலாறாகிய குருபரதத்துவ நூலில் இவரே கூறுகின்றார். உபாசகனுக்கு ஆதரவான பல கருத்துக்கள் அதன்கண் உள்ளன. இந்த நூலினும், உபாசகனுக்கு ஊன்றுகோல்போலத்துணை புரியத்தக்க பல அரியசெய்திகள் கூறியுள்ளார். அவற்றையெல்லாம் எடுத்தெழுதி முடிக்க முடியாது. அன்பர்கள் ஆங்காங்கு கண்டு பயன் கொள்வார்களாக.

இவ்வரிய நூலையியற்றியருளிய ஆசிரியர், மகான் வண்ணச்சரபம் திருப்புகழ்ச்சுவாமிகள், முருகதாசசுவாமிகள் என வழங்கும் அருட்பெருந்திரு, தண்டபாணி சுவாமிகளாவர். இவர், திருநெல்வேலியில் இற்றைக்கு நூற்றிருபத்து மூன்றாண்டுகட்குமுன் தோன்றியவர். எட்டரை வயது முதலாகவே புதுக்கவி பாடத்தொடங்கினர். ஆறுவது வயதிலேயே

விநாயகர்பூசனை, ஆறெழுத்துச்செபம், வேலாயுதவழிபாடு செய்யும் நியதியிலமைந்தனர். பலதலங்கள்தோறும் சென்று, ஆங்காங்கும் உள்ள கடவுளர்மீது, துதிப்பனுவல்பாடினர். ஒவ்வொரு சமயக் கடவுளர்கள் மீதும், சமயாதீதபரமாகவும் பாடிய பனுவல்கள் மிகப்பலவாம். தொகைப் பனுவல்களும் பல. ஐம்பதாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களைப் பாடிப் பனைபோலைச் சுவடிகளில் தாமே எழுதியும் வைத்துள்ளனர்.

தன்னலமான பயன்கள் எதையும் சுவாமிகள் விரும்பியதில்லை. உலக நன்மையையே, தனது முக்கிய இலட்சியமாகக் கொண்டிருந்தனர். இக்கருத்தைத் தமது "நானிலைச்சதகத்திற்" கூறுவது காண்க.

**... ... ... ... யான் பணியுந் தெய்வம்**
**நேரவிர்ந்திப் பிறப்பில்முத்தி யடைகின் குருயோ**
**நினைத்தபடி கொலைமுழுதும் நீக்க வேண்டி**
**ஈரமுடன் நூறுசென்மம் எடுக்கின் குருயோ**
**எனக்கேட்டால் தெரியும்என்றன் இச்சைப் பண்பே"**

திருவருளிடத்து எப்போதும் மன்றாடிக்கேட்கும் முறையிலேயே அருட்சித்தியை வேண்டுவர். மற்றைய சீவக்கொலையைவிட, பசுக் கொலையை முதலில் நீக்க விரும்பினர். பசுக்கட்கு உயர்வாழ்வளித்த தலம், திருவாமாத்தூரென்று அறிவிந்து, அப்பதிசென்று, அப்பேறு பெற்றாலன்றி எல்லை தாண்டேன் என்ற சூள்உரைத்துத் தங்கித்தவமியற்றினர். அந்நிலையில், திருவருளாணையின்படி விளம்பி ஸ்ரீ ஆனி மீ திருவோண நக்ஷத்திரத்தில் (5—7—1898) திருவருட்பேறுற்றனர். அவரது ஞான சமாதிநிலையத்தில், தண்டபாணி மூர்த்தி ஆலயம் அமைக்கப்பெற்று, வழி பாடு முதலியன சிறப்புடன் நடைபெறுகிறது.

இந்நூலைப்போன்று, கௌமார நெறிமுறைகளைக்கூறும் நூல்கள் பல இயற்றியுள்ளனர். **தியானுநுபூதி, கௌமாரவினோதம், கௌமாரலகிரி, கௌமார தீபம், சமயசூத்திரம், திருப்பொதுச் சூத்திரம், ஞானவந்தாதி, பிரணவாநுபூதி, ரதகவுந்தி - பதிகவுந்தி** ஆதியவாம். இவை சாத்திர நூல்களாகும். உலகப் பொதுவிதியாக – **"மநுநெறித் திருநூல்"** நூற்றுமுப்பது அதிகாரத்திற் பல செய்திகளைக் குறள் வெண்பாவினால் இயற்றியுள்ளனர். தமிழ்மொழி அக்கர வரிசையில் உள்ள, எல்லா எழுத்துக்களையும் முதலாகக் கொண்டு குறள்யாப்பில், 247 பாடலில், பலநீதிகளைக்கூறும் நூல் **"வருக்கக்குறள்"**

என்பதாம். வெண்பாவினால் இயற்றப்பட்ட நூல்கள், **போது நூல். சிறப்பு நூல், திருவெண்பா-விற்பவம், அருவாட்சி"** என்பவைகளாம். **அரசாட்சி நூல்** என்ற பெயரில், அரசநீதியைக்கூறும் நூல் ஒன்றும் இயற்றியுள்ளனர். **"புலவர் புராணம், அருணகிரிநாத சுவாமிகள் புராணம். திருவாமாத்தூர்த்தல புராணம், குருபரத்தத்துவம்"** என்ற இவை. வரலாற்று நூல்களாம். **"தில்லைத் திருவாயிரம், திருவரங்கத் திருவாயிரம், பழனித் திருவாயிரம், தெய்வத் திருவாயிரம், சதசப்பதிகம் - பதிகர் சதகம்** போன்றவை, துதிப்பாடல்களான, தொகை நூல்கள்.

ஐந்திலக்கணத்துடன், அவற்றின் பயனாகிய, புலமையிலக்கணத்தை ஆறாவதாகக் கூறுகின்ற, **அறுவகையிலக்கணமும்,** சந்தவண்ணத்தின் இயல்புகளைக்கூறும், **"வண்ணத்தியல்பு"** என்ற நூலும்; இலக்கணவகையைச் சேர்ந்தவையாம். இயல்இசையேயன்றி, மூன்றாவதான நாடகத் தமிழுக்குரியதாக **முசுகுந்த நாடகமும்.** தனிக்கீர்த்தனைகளும் ஆகப்பல இயற்றியுள்ளனர்.

இதுவரை ஏட்டுச்சுவடியில் இருந்த இந்தக் கௌமாரமுறைமை என்ற நூலை, அன்பர் படித்துப்பயன்பெறும்படி, அச்சிற் பதித்து செய்த திருவருளின் கைமாறில்லாக்கருணைக்கு, என்றும் கடமைப் பட்டுள்ளோம்.

இங்ஙனம்,

கௌமாரமடாலயம்,
திருவாமாத்தூர்,
விழுப்புரம் P. O.

ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் பௌத்திரர்
**தி. செ. முருகதாச ஐயா**
**3—1—1964**

வேலுமயிலுந்துணை.

---

**இந்நூலின் சில முக்கிய கவிகட்குச் சிறிதுவிளக்கமும், குறிப்பும் கடைசியில் சேர்க்கப்பெற்றிருக்கிறது. மற்றவை தெளிவுடையனவாம்.**

## பொருளடக்கம்

ஓம்

குருவே துணை.

# கௌமார முறைமை

## பாயிரம்

### கலிவிருத்தங்கள்

பருக ருங்கடல் உண்டவன் பைந்தமிழ்
பெருக நாடுநன் பேசப் பிறங்குசீர்
முருக ருக்கவு மார முறைமையிற்
குருக டாட்சம் குறிப்பது தோன்றுமே. 1

கருமம் பத்தி கழிக்கரும் ஞானம்என் (று)
அரும றைச்சொல் அறையும்என் பார்கள்என்
ஒருமனத்தில் உதித்தமட் டோதுவேன்
தரும சிலத் தவர்உவப் பெய்தவே. 2

உம்பர் என்னினும் ஒருடலாயினும்
இம்பர் மானிடத் தெய்திடின் அல்லது
செம்பரத்துட் புகார்எனச் செப்புசொல்
வம்பர் ஓர்வரி தாகிவ யங்குமே. 3

ஈன்று ளாரொ(டு) எழிற்குரு நாதனும்
ஏன்று நாடுநர் எய்தும்எத் தெய்வமும்
மூன்று காண்ட முறைமையென் றுன்னுவார்
வான்று திக்க வருகவு மாரரே. 4

மற்றை நான்கு வகைப்படு பூதமும்
உற்றவானில் உளநெறி யாவையும்
பெற்ற டக்கும் பெருமதம் யாதெனில்
கொற்ற வேற்கைக் குகன்கவு மாரமே. 5

உருவ நாட்டம் ஒருங்கிகழ் வார்களும்
குருவுண் டென்பர் அக் கொள்கையும் தாண்டிநின்(று)
ஒருவன் யாவரும் ஒப்பவென் றுல்அவன்
சருவ வல்லவத் தற்பரன் மைந்தனே. 6

செல்வம் கல்வி திருவருட் பேறெனச்
சொல்வ கைக்குட் சுரர்களும் தோயொணு
வல்வ ழக்கின தோர்பவர் வண்பதத்(து)
ஒல்வ தாந்துகள் ஓர்வரும் தஞ்சமே. 7

குருவே துணை

## முதலாவது

# கருமகாண்டம்.

## (பொதுவியல்)

### எண்சீர்க்கழி நெடில் விருத்தங்கள்

உயிர்வருந்தப் படுத்தாமை கொலைசெய் யாமை
ஊண்உண்டு களியாமை உடையோ ரெல்லாம்
பயிரனையார் எனலாகும்; மற்றை யோரைப்
பாவமிகும் களையெனவே பகர லாகும்
செயிர்உறமீ மாஞ்சன்மொழி தருபொய் வேள்வி
செய்கின்றோர் தம்மையெண்ணித் தேரில்; சென்னி
மயிர்பறித்துக் குரவர்களை வருத்தி, நீரால்
மலங்கரைத்துப் பாய்உடுப்போர் வாண்மையோரே. 1

மாதாவை, உடன்பிறந்த மடவார் தம்மை
மைந்தரை,மற் றனையாரை மருவும் பொல்லாத்
தீதாள ரினுங்கொடியார் தம்மையெண்ணில்;
திலோத்தமையா தியர்வலிதிற் சேரவேண்டி
வாதாடி னாலும்ஒப்பாத் துறவோ ராயும்
மகக்கொலைநன் றெனத்துணிந்து வசனிப்போரே
வேதாமுன் வந்துபகர்ந் தாலும் ஒப்பா
விரதியர்க்கே சித்தியெட்டும் வீடும் உண்டே. 2

அக்கினியில் அவிசொரியச் சொன்ன வேதம்
ஆறுநெறி கூறுதலால் அறிஞர்க் கென்றும்
மிக்கினிதே; அதனுடன்ஊன் பெய்யச் சொல்லல்
வேனன்எனப் பாகவதம் விளம்பும் கண்டீர்
திக்கிலுள்ள வேதங்கள் எவையா னாலும்
சீவவதைக்(கு) இழிவுரைக்கில் தெய்வவாக்கே
கக்கியுண்ணும் நாயனைய சண்டி மாந்தர்
கள்இறைச்சி உண்கைபெருங் கடன்என்பாரே. 3

ஒருவேதம் பலசமயம் சொல்லுமாகில்
உள்ளநெறி அத்தனைக்கும் ஒருவன்றனே
குருவாகும் விதம்உணர்மெய் ஞானத்திற்கோர்
கொழுகொம்பாம்; ஒன்றுரைக்கிற் குவலயத்தில்
பெருவாது செய்யும்ஒரு மதநூல் ஆகும்
பிரான்மொழியென் றவரவரும் பேசல் உண்டு
திருவேதம் அநந்தமெனப் பகர்கின் றோரே
சீரியோர் மற்றெவரும் சிறியோர் தாமே. 4

சிற்றுயிர்கட் கொன்றருந்தச் சொல்லும் வேதம்
தெய்வமொழி யானாலும் சீவர்நூலே
சற்றும் அதொன் றுகாதென் றுரைப்ப(து) எந்தச்
சமயநூ லானாலும் தவத்தின் தாயே
முற்றுலங்கும் சதுர்வேதத் துடன்அந் நாளில்
முடியொருபத் துடையானேர் மூர்க்கர் பல்லோர்
செற்றுணலைச் சேர்த்துரைத்தார், உரைசெய் தோனும்
சிற்றறிவால் அப்படியே செப்பினனே 5

சாதியென உலகபரம் பரையிற் காணல்
சரதமெனக் கூடும்; வெறுந் தவறன் றுண்மை.
நீதிமுறைத் தொழில் முறையில் மேல்கீழ் ஓர்ந்து
நேரிழையார் கற்பின்வழி நிறுவல் கண்டீர்!
மாதிரத்தில் அதுபொது வன்(று); ஆதலாலே
மாறுமே தந்தைமதி மக்கட் குண்டாம்
ஏதிலவர் வினைமுயல்வார் பலரானாலும்
இயம்பும்ஒரு நால்வகையே இயல்பாம்: அன்றே 6

நால்வகைமரபு

கற்றறிந்து மற்றவருக்(கு) உரைத்தல் ஆதிக்
காரியங்கள் வேதியர்தங் கடமை யாகும்
கொற்றநெடு வாளேந்திப் பகைவென் றிந்தக்
குவலயமுற் றுள்கைமன்னர் கொள்கையாகும்

விற்றல்கொள்ளல் ஆதியவை வணிகர்க் காகும்
வேளாண்மை அமைச்சுரிமை வினயம் ஆதி
நற்றகைச்சூத் திரர்க்காகும்; என்ன நாளும்
நான்மறைஆ தியநூல்கள் நவிலுமன்றே 7

## ஆச்சிரமம்நான்கு

தனித்திரந்துண்(டு) உத்தமச்சீர் மனைவி வேண்டித்
தவம்புரிதல்; மனைவியோடு சகத்தொ டொத்துத்
தொனித்தபெரும் புகழ்த்தருமம் விளைத்தல்; சற்றும்
தொல்லுலகில் ஆசையில்லாத் தோகையோடும்
சனித்திறவா நலம்விரும்பித் தெய்வம் போற்றல்;
தற்பரமொன் றல்லாது சாற்றல் எல்லாம்
அனித்தமெனத் துணிந்தேகல் என்னும் நான்கும்
ஆச்சிரமம் என்றுரைப்பார் அறிவுள் ளோரே 8

குலதருமம் ஆச்சிரமம் தருமம் ஆதி
கோடாநு கோடி முன்னூல் கூறல் எல்லாம்
நலமெனவே ஒப்பியதால் அவற்றை வீணே
நாம் இதனில் விரிக்கவில்லை; நான்குசென்னி
மலரவனு தியதேவர் எனினும் சிவ
வதையுரைத்தால் அதனைமட்டும் மதிக்க வேண்டாம்
புலவர்பிரான் ஆவதெண்ணிக் குதிரைகொல்லும்
புரவலரும் அறிஞருக்கோர் புழுவொப்பாரே. 9

எக்கருமம் செய்தவனை விலக்கினாலும்
இறைவனைமுன் னிடுமவற்றை யிகழப்போகா(து)
அக்கரும மேஉயிர்க்குத் துணைய தாகும்
ஆசாரம் இரக்கமென்ப(து; அனைத்தும் வேண்டும்
மக்களுருக் கொண்டலையும் மிருகம் போல்வார்
வழியல்லா வழியினிற்போய் மாழ்கிச்சாவார்
தொக்கமுன்னைத் தவமுடையார்க் கிந்தஞாயம்
தோன்றும்; மற்றோர்க் கிதுவும் ஒரு சொல்லாம் அன்றே 10

ஒருயிருக்(கு) உடலனந்தம் என்னும் ஞாயம்
ஒப்பாத சமயத்தோர் உலகிற்சில்லோர்
வாருறுமென் முலையாரைப் புணர்ந்து பெற்ற
மதலைகளே பிறவியென வகுப்பார் சில்லோர்
சாருமனச் சங்கற்பத் தொகுதியெல்லாம்
தம்பிறப்பாம் என்பர் சில்லோர்; தவத்தோர்மெச்சும்
சிருலவாப் பொதுநூல்வள் ளுவனுர் தாமும்
செனனம் உண்டென் றுரைத்தமொழி தெரியாதாரே 11

கருமபலந் தனைப்பெரிதென்(று) ஒப்பாதாரே!
கண்ணிழந்தோர் முதலாய கடையோர் தாமும்
பெருமையுறும் மாதவத்தோர் ஆதியோரும்
பேசுங்காற் சமமாமோ ? பிரான்மேற் குற்றம்
வருமெனவுங் கருதாமல் வாதிக் கின்றீர்
வம்பாகும் இதனைவிட்டு வாய்த்த மட்டும்
தருமமொடு தவம்புரியத் துணிமின்! அந்தோ
சமணர் புத்தர் ஆதியரும் தழுவல் ஈதே 12

பாவமிஞ்சி நாய்நரிநற் பூ(டு) ஆவோரும்
பழிக்கரிய புண்ணியத்தாற் பரலோகத்தில்
தேவர்களா வாழ்வோரும் மனித ராகச்
செனித்தலது முத்தியினிற் சேரொண் ணுதால்
காவலர்ஆ தியராகத் தோட்டி யீருக்
கழறுகின்ற மானிடரிற் கருணைகொண்டு
சேவலங்கைக் குகன் முகங்கள் ஆகும்ஆறு
திருச்சமயத் தொன்றில்நிற்போர் சீரியோரே 13

தந்தசுத்தி செயும்கொம்பின் நீளம் ஆதி
சாற்றுகின்ற நூல்கள் உண்டு; சடம்போல் வார்க்கே
அந்தவிதி வகையினிக்கும், மற்றையோர்கள்
அமைந்தமட்டிற் செயலாகும்; அதனுற் துன்பம்
வந்தணுகா(து), இப்படியே யாகும் எல்லா
வகைக்கும் எனத் துணிவதும் மடமையாகும்

எந்தநெறிக் கும்தம்மிற் பெரியோர் தம்மோ(டு)
இணங்கிநடப் பதுமிகவும் ஏற்றம் தானே 14

தெய்வம் உண்டென் றெப்புகின்ற சமயம் எல்லாம்
தெளிந்தோர்க்குக் கௌமாரச் சேர்க்கை யேயாம்
பொய்வழக்கென் றெண்ணிவம்பில் இகழ வேண்டாம்
புவனகோ டிகள்முழுதும் பொலியச் செய்த
மெய்வலிதோய் பொருள்உருவா நேர்வந்தாலும்
வியன்குருஎன் றேதன்னை விளம்பும்; அந்த
ஐவடிவை அதன்புதல்வன் என்கைக் கொப்பார்
அறிவினரன்றுஎனல் ஞாயம் ஆதலாலே. 15

சமயநிலை நிறுவவல்ல குரவர்தாமே
தற்பரன்சேய் என்பர்சிலர்; சந்தானப்பேர்
அமையவரும் குரவரையும் சொல்வார் சில்லோர்
அண்டபிண்ட சராசரங்கள் அனைத்தும் சேய்என்(று)
இமையவரிற் சீரியமெய் ஞானத் தோர்கள்
இயம்புவார்; இவையுணரும் இயற்கௌ மாரர்
தமையடுத்தோர் செய்கருமத் துண்மைச் செல்வம்
தழைக்கு மன்றித் தவறென்றும் சார்ந்திடாதே. 16

அண்டத்தின் தோட்டுருவம் சிலையே யாகும்
ஆதலால் குறிச்சியன்றி அகிலமில்லை
தொண்டர்க்குள் வேண்டியவா(று) உருவங்கொண்டு
தோன்றுதற்குக் குகனலதோர் தெய்வமில்லை
கண்டத்தோ(டு) அகண்டமெனும் இரண்டும் தேறும்
கவுமாரச் சித்தர்இதைக் காண்பார்; மற்ற
வண்டர்க்கோர் அபிமானச் சொல்லாத் தோற்றும்
மறுத்தாலும் சத்தியந்தான் மாய்வுறாதே 17

நல்லபரம் பொருளையொரு வடிவமாக
நாடினன்றிப் பிழைக்கரிய ஞாயந்தேர்ந்தோர்
எல்லவரும் கல்லதனல் அமைக்குந் தன்மை
யார்அறியார் மயிலுகைக்கும் எழிற்குமாரன்

வல்லதிரு வடிமலேதோ ருடல் அன்றே
மயிர்பறித்து நின்றுண்போர் வகுத்து நூலிற்
சொல்லல்அபி மானமெனக் கூடும் கொல்லோ
சுப்பிரமண் ணியமெனுஞ்சொல் சோர்வதன்றே 18

கலையனைத்தும் கற்றபயன் தெய்வத் தன்பே
கடைப்பிடியென் றுணர்வரிது, கைக்கொண் டாலும்
தலைமைதரும் சித்தியோடு முத்திவேண்டித்
தவம்புரிவ தரி(து), அதனைச் சார்ந்திட்டாலும்
அலைகடற்பார் மகட்குதவுந் தருமம் ஒன்றே
அதிகமெனத் தெரிவதரி(து) அதுபெற்றாலும்
சிலையதனல் உருவமைக்கும் சமயமெல்லாம்
சேயினதென்றோர் வரிதாம் தெளிந்துய்வீரே 19

நரகசொர்க்கம் நிவிர்த்தியின்மை, நவின்றுபொல்லா
நாயுணவும் உண்ணுநெறி நண்ணுவாரும்
குரவன் அருட்குமாரன்எனக் கூறுகின்றார்
கோலமயில் இறகையொரு குறியாக்கொண்டார்
சரவணன்சண் முகமாய சமயத் தொன்றைச்
சார்ந்தசைவர் ஆதியர்தாம் தணவப்போமோ
பரவுகவு மாரநெறி யெளிதன்(று) அந்தப்
பரம்பரையில் அறிந்தமட்டும் பகர்கின்றேனே 20

சூரியனே பிரமமெனச் சொல்வ(து) ஒன்று
சுடர்மழுவான் தெய்வமெனத் துதிப்ப தொன்று
வீரியசத் தியைப்பொருளா மொழிவ தொன்று
விட்டுணுவே தலைவனென விளம்பல் ஒன்று
சீரியக ணேசன்எனக் கூறல் ஒன்று
செவ்வேற்கைச் சேந்தன் எனச் செப்பல் ஒன்று
ஆரியநூற் றலைவர்உணர் சமய பேதம்
ஆறுமெங்கள் கவுமாரத்(து) அணித்தாம் அன்றே 21

ஆலயத்திற் போய்வணங்கல் சால நன்றென்(று)
ஔவை சொன்ன மொழிப்படியே அளக்கொண் ணாத

சிலமலைத் தொகையுள் ஒன்றிற் குகனைப் போற்றித்
தெண்டனிட்டுத் திருப்பணியும் செய்து வேடர்
போலரிசி யுடன்உதிரம் பெய்யா ராகும்
புண்ணியர்க்குச் சாலோகம் பொருந்தும் இந்த
ஞாலமிசை வாழ்பலரும் உய்யு மாறு
நல்விரதம் ஆதியவை நவில்கின் றேனே 22

மகப்பேறு மணம்சாவு முதலவாய
வகைகளுக்கும் விதிகள்பல வகுத்தார் முன்னோர்
அகத் தோங்கும் பொருளளவிற் செயலே நன்றாம்
அதுகிடக்க; நூலிழந்திட்(டு) அனங்கன் அம்பால்
மிகச்சோரு மடநல்லாள் கலவி வேட்டு
மேவுகருப் பங்கெடுக்கும் வினையையெண்ணில்
சகத்தோர்கள் அறியமற்றோர் கொழுநன் றன்னைச்
சார்ந்திருக்கச் சொன்னமுறை தவறாதே. 23

**கௌரசமயம், சூரியன்**

பிரணவ மந்திரம் தருப்பை பசுவின் சாணம்
பிழையென்று நெறிஆறும் பேணத் தக்க
வரமுதலாம் சூரியனை வழிபட்(டு) அந்த
வாரமதிற் பொங்கலிட்டு வணங்கிப் போற்றி
விரதமிருப் போர்கருணையுடையோ ராகில்
மேனியிடத் துள்ளனவாம் வியாதி யெல்லாம்
திரமெனநில் லாமல்அதன் கிரணம் கண்ட
சிறுபனிபோல் ஓடுமிது திண்ணந் தானே 24

**சூரியன் - கௌமரத்தொடர்பு**

காசிபன்றன் மனைவயிற்றிற் பிறந்த வாற்றால்
கதிரவனும் குமாரன்என்றே கருதலாகும்;

ஆசியுடைத் தங்கடவுட்(கு) இடம்அதாம்என் (று)
அறுசமயத் தோர்களும்நன் கறைந்திட்டாலும்
வீசியநீர்ப் பெருங்கடற்சூர் மதலைஅந்நாள்
வென்றதற்காக் கொன்றமுதல்வீரன் அன்பாற்
பேசியமெய்த் தெய்வமெனத் தன்னைச் சொல்லிற்
பிணங்கிடான் உவகைமிகப் பிறங்குவானே 25

## வழிபாட்டுநாள் –

சருவசம யங்களுக்கும் சாட்சி, எந்தச்
சமயத்தோர் களும்இகழாத் தனிச்சொரூபம்
பொருவில்மதி யந்தனைஉண் டுமிழ்ந்திட்(டு) எல்லாப்
புவனசரா சரமுமல்கப் புரியும்சோதி
வருவனபன் னிரண்டுவகைத் தெருஎன்றாலும்
வயமாவின் வீதிஅதன் வசத்ததாம்;ஆல்
மருவும் அந்தமாதத்தில் தோற்றுமுன்னை
வாரமட்டி லேனும்அதை வணங்கல் நன்றே. 26

## பேறடைந்தவர்கள்

சகளமொடு நிட்களமும் சொல்ப வாய
சதுர்வேத சித்தாந்த சமயத் தோர்கள்
மகரசங்க ராந்தி,அமா வாசை என்ன
வழங்கும்இரு விரதத்தின் வண்மை,எங்கும்
திகழ்பரிதிக் கேயாகும். அந்தத் தெய்வத்
திருவருளால், தியாகியெனச் சிறந்தோன்என்னப்
புகல்பெருமைக் கன்னன்வந்தான்; திவாகரப் பேர்ப்
புலவன்வந்தோர் இலக்கண நூல்புகன்றிட்டானே 27

## சைவம் – சிவன் – கௌமார சம்பந்தம்

சத்திதரு சினைமூன்றுள் ஒன்றில் வெள்ளைச்
சரசுவதி யுடன்உதித்த சம்பு வான

நித்தியனும் குமாரனெனச் சொல்லலாகும்,
நெடுங்கயிலைத் தடங்குவட்டில் நிலைத்துவாழ் வான்
பத்தினியும் மலைமகளே, வில்லும்செம்பொற்
பருப்பதமே அயன்திருமால் பகைத்த நாளில்
மத்தியிற்போய் மலையுருவ மாயும் நின்றான்
வல்லாளன் மனைமுலைப்பால் மாந்தினனே. 28

## சிவ விரதச் சிறப்புகள்

வெங்கண்அர வணையசின வேடனாகி
வில்விசய னொடுபொருத விமல னுக்குத்
திங்களெனும் கிழமையினிற் பிரதோடத்திற்
சீர்த்தவிர தாதிமிகச் செய்வோர்க் கெல்லாம்
மங்களகோ லாகலங்கள் அனந்தம் உண்டாம்
மாதவம்செய் வார்மனம்போல் வரங்கள்நல்கும்
துங்கமுறு தெய்வம்அவ னன்றி யில்லை
துலங்குபுரா ணங்கள்முற்றும் சொல்லுமன்றே. 29

## சாத்தேயம் – சத்தி – கௌமாரி

தக்கன்இம வான்முதலோர் மனைகள் தோறும்
தனயளென வளர்ந்தபரா சத்திதன்னை
மிக்ககவு மாரியெனச் சொல்லொண்ணாதோ
வேல்வடிவும் அவளெனவே விளம்பல் உண்டு
சிக்கமயி லேயனைய சாயற்காரி
சிகரிநிகர் முலையுடையாள், சீவர்க்கெல்லாம்
மைக்கருங்கண் மாதாவாய் மனைவியாகி
மகளென்றும் விளையாடும் வண்மையாளே 30

தோற்றுகின்ற வடிவமுற்றும் அவளதாகும்
சொல்லிறந்த பொருளும் அவள் சொந்தமேயாம்
கூற்றுதைத்தோன் ஆதியரும் முன்னுள்ஈன்ற
குமாரர்என்றால் அவள்பெருமை கூறப்போமா

போற்றுநர்க்குச் சித்தியொடு முத்திநல்கும்
புகழ்உடையாள், செவ்வாய்நாட் பூசைகொள்வாள்
சாற்றுகன்னி ரவியில்நவ ராத்தி ரிக்கட்
சகலலோ கமும் வணங்கத் தழைப்பாளன்றே. 31

முழுமதியந் தோற்றும்எழிற் பருவ நாளில்
முனிவர்களும் சித்தர்களும் முந்நீர் சூழும்
விழுமியபே ருலகினிற்பல் பெரியோர் தாமும்
விதிமுறையிற் பூசிப்பார்; வீணர்சில்லோர்
கழுகருந்தும் மாமிசமும் ஈனர் வேண்டும்
கள்அரக்கும் படைத் தறிவிற் கடையர்ஆவார்
பழுதில்புகழ்க் கொங்கணன் சங்கரனேபோலும்
பக்குவச்சாத் தேயர்இதன் பயன்ஓர் வாரே. 32

## வைணவம், விட்டுணு, கௌமார இயல்பு

பண்டுதித்த முட்டைகளில் ஒன்றே யான
பச்சையினிற் சிவையோடு பரிந்து தோன்றும்
விண்டுவையும் குமாரன் என்றே வல்லோர் சொல்வார்
மேதியினிற் பலவாறு மேவி மேவிக்
கண்டுறழ்சொற் றுய்முலைப்பால் உண்டு பொல்லாக்
களையனையார் வேர்களைந்து கருணைசாலும்
தொண்டுடையார்க் கினியநலம் முழுதும் செய்யும்
தொழிலுமவன் றன்னதென்கை துணிவாம் அன்றே. 33

இரணியன்சேய் சடகோபன் ஆதியோர்போன்(று)
எட்டெழுத்தி னதுபெருமை யாவுந்தேர்ந்தோர்
சரணமதில் வேறுதெய்வம் தோற்றிடாது
கவுரவர்தம் போர்க் களத்திற் கலபம்சூடிச்
சரணிரண்டும் செவிப்புறத்திற் றூங்கிப் பார்த்தன்
தனக்குநெடு மால்உரைத்த சரதந்தேர்வார்

மரணமுற்றுப் பிறந்துழலும் வினையுள்ளோர்கள்
வயிணவத்தும் வெவ்வேறு வகைசொல்வாரே. 34

### ஶ்ரீ விரதநாள் சிறப்பு

புந்தியெனும் கோளினுக்கு மால்என்றோர்பேர்
புகன்றுபச் சைநிறமெனவும் புகலக்கேட்டும்
அந்திருமால் விரதத்துக்(கு) அவன்நாளாம்என்று
அறியாதார் இவ்வுலகில் அநேகர் உண்டு
பிந்தியசிற் சிலர்முடவன் நாளாமென்று
பேசினர் அம்மொழியிற் பிறழ்ந்துபோனர்
அந்தியமாம்அது பொதுவாற், சிறப்பென்றெண்ணில்
அதனிலும் சற்றுண்டுபயன் அநுட்டிப்பார்க்கே. 35

நல்லேகா தசிவிரதம் பிடித்துப்பல்லோர்
நாரணன்ஊர்க் கதியடைந்தார் நான்சொல்வானேன்.
வல்லே யொத்திலங்குமுலை மச்சகந்தி
மகன்உரைத்துள் ளான்அதன்றி வழங்கலஉண்டு
கல்லேர்த்திண் டோட்கனகன் மனைத்தூணூடும்
கலந்திருக்கும் பொருள்நிலயம்கருதி டாராய்க்
கொல்லேநத் தோரும்வயி ணவர்யாம்என்னக்
கூறிவெறிநீர்குடித்துக் குதிப்பார் அன்றே. 36

### காணபத்தியம், கணபதி, கௌமாரத்தொடர்பு

ஆனையுருக் கொடுசிவனும் உமையும் சேர்கால்
அதன்முகத்தோ டுதித்தவனும் ஐந்துசெங்கைக்
கோனைஅருட் குமாரனெனக் கூறெண்ணுதோ
குவலயத்து மணமுடிக்கும் கொள்கையூடும்
ஏனையசாக் காட்டபரக் கிரியை யூடும்
இலங்குகின்ற தெய்வம்அவ னன்றியுண்டோ
மானைவென்ற விழிவலவை யோடுபோற்றி
வரம்பெற்றோர் கதைமுழுதும் வகுக்கொண்ணாதே. 37

### ஷ விரதநாள் சிறப்பு வழிபாடு

தனைநினைவார் செய்தொழிலில் இடையூறென்றும்
சாராமற் புரந்தருளும் தந்திக்கோமான்
பனைநிகர்கை யால்ஒருபா வல்லாள் வெள்ளிப்
பருப்பதத்திற் சேரவிடல் படியும்சொல்லும்
அனையவனைக் குருவாரம் சதுர்த்திநாளில்
ஆராதித் திடலாகும்; அவல்எள் உண்டை
நனையரிசி பயிறுவடை தோசையாதி
நல்லுணவெல் லாம்அருந்தும் நசையுள்ளோனே. 38

### கௌமாரம், குமாரன், முருகன்

ஆறும்நா ளாயவெள்ளி வாரம்,சட்டி
ஆரல்நாள் ஆமவற்றில் அபிமானிக்கும்
வீறும் கவுமார சமயத் தோர்கள்
வேறுநெறி யோர்கள், தம்மை விரும்புவாரேல்
சீறுமல் உறவாடிக் கலந்து கொள்வார்
சினந்திகழத் துணிவாரேற் செங்கைவேலாற்
கூறுடிக் கொக்கரித்து வென்றிச் சேவற்
கொடியேற்றிக் களிகூருங் கொள்கையோரே. 39

சூரனைக்கொல் வதன்நிமித்தம் சிவனுர்கண்ணில்
தோன்றினுன் குமாரன்எனச் சொல்லும் மார்க்கத்(து)
ஈரமுற்றுப் பாடுபடும் இளங்கௌ மாரர்க்(கு)
இயல்பான கவுமாரம் இலங்கிடாது;
நாரணன் ஆதியர்த்தொழும் உட்சமயத் தோர்க்கும்
நஞ்சனைய ராய்த் திகழ்வார், ஞாலந்தன்னில்
ஆரணநூல் சொலும்ஆறு சமயத்தொன்றென்(று)
அறைவதனுக் கந்நெறியே அழகாம்: அன்றே. 40

நவவீரர்; ஆதியராம் பரிவா ரங்கள்
நவிலரிய பலவாறு நண்ணிச் சொல்வார்
தவராச னைஅகத் தியனும் முக்கட்
சங்கரனும் பரவுகுரு சாமியென்பார்
சிவபாத இருதயன்றன் மதலையாகித்
திருட் டமணர் கழுவேறச் செய்தோன் என்பார்
உவராழி நீர்சுவற வடிவேல் ஏவும்
உக்கிரபாண் டியனென்றும் உரைசெய்வாரே 41

மயிலொன்றும் தகரொன்றும் வேழம் ஒன்றும்
வாகனங்க ளாயமைந்த வல்லோன் என்பார்
குயிலென்ற குறமகட்கும் விண்ணூர்த் தெய்வ
குஞ்சரிக்கும் கணவனென்பார் குன்றம் தோறும்
அயிலும்பல் படைகளும் கொண்டாடல் செய்யும்
ஆறுமுகக் கடவுளென்பார்; அறிஞர் முன்னுள்
பயில்கின்ற சாத்திர புராணத்துள்ள
பலகதையும் நண்ணிமிகப் பகர்வார் அன்றே 42

சம்பந்த மூர்த்தியினைக் குமரன் என்னச்
சைவ சமயத்தில்உள்ளார் சாற்று வார்கள்
கம்பங்கைத் திருநெடுமால் சமயத் தோரும்
கனதிருவாய் மொழிப்புலமைக் கவிஞன்றன்னை
வெம்பஞ்ச பாணமுடைக் குமாரன் மாலை
விரும்பியணிந் தானெனவே விளம்பு வாரால்
தம்பந்தம் அறுப்போனே குமார னென்னச்
சாற்றுகின்றோர் கவுமாரத் தவரா வாரே 43

ஆறுசமயத் தோருள் வயிண வன்றான்
அணிவதுமண்; சாத்தேய மதனிற் பாதிக்
கூறுடையான் குங்குமமாம் மற்றை யோர்கள்
கொள்ளுவது வெண்ணீறே, குருவை நம்பித்
தேறுகவு மாரன்இவை யாவும் தோற்றும்
திருவேடம் புனைவதற்கும் சிறிதும் நாணான்

மாறுபடும் புலேச்சமயத் துள்ள மாந்தர்
மரையினம் போற் குறியிலது வாழ்வார் அன்றே 44

கருமம்அள விறந்தவிதம் ஆமென் ருலும்
காரணபூ ரணஞன கடவுள் உண்மைத்
திருவருட்காச் செய்வ தொன்றே நன்மையாகும்
தெரிந்த மட்டில் ஒருவாறு செப்புகின்றேன்
பொருவிலவாம் ஆறுவகைச் சமயங் கட்கும்
பொதுவே நான்; என்ருலும் புவியோர் ஒப்பார்
குருபரம்என் றுணர்த்துகவு மாரந் தொட்டே
குறிகண்டேன் அபிமானக் குணமும் உண்டே 45

ஒருசமய நிலேயில்நின்று சாதித் தப்பால்
ஊறுதவிர் சமரசத்தில் உறுதல் மேலாம்
பெருநெறியாம் அதுசேர்சங் கரனேமுந்நாள்
பேணிய சாத் தேயனெனப் பேசு வார்உண் (டு)
அருள்நலந்தோய் அப்பையன் அரங்கந் தன்னில்
அதீதவுண்மை பெற்றதன்மை அறையும் போது
தருணமதிச் சடையான்மேல் வாஞ்சைகொஞ்சம்
தழைத்ததென்ருன் அவைகருதிற் சரதந் தானே. 46

கொன்றுநிணந் தின்னும்இழி வில்லார் எந்தக்
கொள்கையோ ராஞலும் குமரன்றன்பால்
ஒன்றுநரே யெனத்தழுவிப் பொதுவாம் என்னே
ஒருசமயத் தபிமானம் உளான்என்ருலும்
நன்றுநன்றென் றெப்புகின்றேன்; அன்றென்றேதல்
ஞாயமல்ல ஆதலினுல் ஞால முற்றும்
முன்றுலங்கச் செய்தளித்துத் தொடைக்கும் தெய்வம்
முழுதுணர்ந்த புலவனெனில் முனிவா ரின்றே. 47

மேலவருக் கிறையவனும் தெய்வ மன்றி
வேறுதெய்வ மில்லேஅதே; விழைவார் எண்ணல்

போலனந்தம் வடிவெடுத்துச் சமயங்கோடி
பூதலத்தில் வாழவைக்கும்; புண்ணுநொந்து
காலன்நிகர் ஐயமுற்றுச் சுழல வேண்டாம்
கடையாய கருமிகட்குக் கழறி னுலும்
சீலமறைத் துணிவிதெனத் தேற மாட்டார்
தெண்டனிட்டு வழிபாடும் செய்தி டாரே. 48

யானருணைக் கோபுரத்தில் இசைத்த தாம்ஆ
றெழுத்தலங்கா ரத்தினுக்குள் இயங்கு கின்ற
ஆனபல மந்திரத்துள் ஒன்றைப் பற்றி
அதன்வழியே முயன்றிருத்தல் அழகாம். அன்றித்
தியானஅனு பூதியென்றோர் நூல்சொற் றுள்ளோம்
தீவிரபக் குவர்க்கதொரு திருக்கண் கண்டீர்
மானமின்றிப் பலநூலும் பார்த்துப் பார்த்து
வாழ்நாளை வீணுளா மாய்க்கொண் ணுதே 49

வேதமுடி வானவுப நிடதத் துண்மை
விளம்புமட்டும் கற்றுணர்ந்தோர் மேன்மையெண்ணில்
வாதமரு, ஒருசமயத்தினரே ஒப்(பு)ஓர்
மந்திரசித் துள்ளான்றன் வண்மைக் கொவ்வா(து)
ஈதகிலத் தோரறியார் இந்த மட்டும்
இயம்பியது பொதுக்கருமம், இனிமேற் சொல்லல்
பூதலத்தோர் களுங்காணும் சிறப்பதாகப்
பொருளுதவி யாற்புரியும் பூசை தானே, 50

### சிறப்பியல்: வழிபாடு

மானதத்தாற் பூசித்தல் உயர்ச்சி யென்(று)ஓர்
வாய்பாடிவ் வுலகத்தில் வழங்கல் உண்டு
தானருந்தல் பொருந்தலும்அவ் வாறுசெய்யத்
தக்கவர்க்கே அம்முறையாம்; தன்னுற்செய்தற்(கு)
ஆனநிவே தனம்தூபம் தீபம் ஆதி
அகத்தினுற் செய்தல்வஞ்சம் அன்றோ? முன்னோர்

ஏனறிந்த தெய்வத்தின் வடிவந்தானும்
இயற்றிவழி படச்சொன்னூர் எண்ணி டீரே, 5

### வடிவம் அமைக்கும் விதம்.

தங்கத்தால் வெள்ளியினூற் செம்பாற் கல்லால்
தாருவினூல் சாந்தினூல் சித்தி ரத்தால்
அங்கத்திற் குறைவின்றி விரும்புந் தெய்வத்(து)
அணிவடிவம் சமைத்திறைஞ்ச லாகும். தன்னிற்
பொங்கத்த தாகில்மிக நன்றாம், தன்னைப்
போல்வதும்.ஆம், குறைவுபடல் பூலோகத்தும்
சங்கற்பம் போல்விளங்க விரும்பு வார்க்குத்
தகுதியல்ல; பயனுண்டு; தவறு காதே. 52

செம்புருவிற் புளியிடல்போல் வெள்ளிபொன்னிற்
செய்தவற்றிற்(கு) இட்டாலும் தீதா காது
வம்புறும்எள் ளெண்ணெய்இம்மூன் றினுக்கும் ஆகா
வண்சிலைக்கு மிகவும்அது வார்க்கவேண்டும்
நம்புமரம் ஆதிகட்கு நனைவா காது
நானிலத்து வழக்கமிது. ஞானம்போலும்
தெம்புடையார் தெய்வம்நிறைந் தமைவு ராமல்
திருவுருவைப் போற்றலெண்ணிச் சிரிப்பார். அன்றே. 53

மதுரையிற்கல் லாடருக்காத் தலையசைத்தல்,
வண்டமிழ்ச்செந் தூர்த்தெருவில் வழுத்துந்தொண்ட
னதுமுகமாத் திரும்பல்கச்சி யூரிற்செட்டி
ஆனந்த முறப்பேசல், அமுத பாலன்
குதுகலிக்கச் சோறுண்டல்; புலியூர்மன்றிற்
குருநமசி வாயருக்காக் குதித்தல்ஆதிப்
புதுமைபல விக்கிரகத் தெய்வம்செய்தல்
பொய்யென்பார் எரிநரகிற் புகுவா ரன்றே 54

யாவும்வல்ல(து) எவ்விடத்தும் நிறைந்ததாகும்
இணையில்பரம் பொருளெனுஞ்சொல் இசைத்தும் சில்லோர்
தேவுடைமை யென்றமைத்துப் பலர்கொண்டாடும்
திருவுருவைப் பழிப்பதெண்ணித் தியங்கொண்ணுது
நாவுடைமை போல்நடத்தல் முதலெப் பேறும்
நல்குமெனத் துணித்துமிக நண்ணவேண்டும்
பூவுலகில் ஆண்டானைப் பூலிதன்னைப்
போன்றபல சாட்சியுண்டு புகலுங் காலே. 55

ஆதலினல் விக்கிரக பூசைமார்க்கம்
அரன்விதித்த ஆகமங்கள் அறையுமேனும்
வேதவிதிபோல் அவையும் மறைவேயாமால்
வேண்டியமட் டொருவாறுவிளம்புகின்றேன்.
பூதசுத்தி பொருட்சுத்தி யெனும் இரண்டும்
புத்திசுத்தி யோடுமிகப் பொருந்தவேண்டும்
ஓதரிய பொருளினதாக் கைகால்ஆட்டல்
ஒருங்கு நமக்காகாதென் றெழிக்கொண்ணுதே 56

மஞ்சள்வெட்டி வேர்ஆதி கலந்த தெண்ணீர்
மது இளநீர் பால்தயிர்பல் வகைப்பழத்தில்
பஞ்சதா ரையைக்கலந்த(து) அரைத்த சாந்தம்
பரிந்தாட்டி மூர்த்திகள்தம்பரிசுக் கேற்ப
மிஞ்சஅலங் கரித்துமலர் மாலை சாத்தி
விதித்தநிவே தனம்அமைத்து விரும்பு மன்பாற்
கஞ்சமலர்க் கரங்கொடுநீர் இரைத்துத் தூபம்
காட்டிஅப்பால் தீபமிடல் கடனும் அன்றே 57

அபிடேகங் தோறும்நிவே தனம்கற் பூரம்
அமைத்தாலும் அந்தந்த மந்தி ரத்தை
செபியாமற் றெழிலளவிற் செய்கு வோர்க்குச்
சித்தியில்லை பூசிக்குந் தினங்கள் தோறும்
கபிலாதி தானங்கள் நல்க லாகும்
கருணையின்றிச் செயல்அசுர கரும மேயாம்

சபியாத சாந்தகுணத் தினரா லும்
    சத்தியமொன் றில்லையெனிற் றவறுண் டாமே. 58

ஆலயங்கள் மந்திரங்கள் அமைக்குந் தன்மை
    அத்தனையும் சிற்பமுத லான நூல்கள்
சாலநுவன் றிடும் அவற்றைக் கொள்ள லாகும்
    தகராதி கோலச்சொல்லல் தழுவொண் ணாது
சீலமுறும் எசமானன் விருப்பம் போலச்
    செய்மின்என்றந் நூல்முடிவிற் செப்ப லன்றி
மூலபர மானந்தத் தெய்வந் தானும்
    முன்னியவாற் றிற்கிசையும் முறையொன் றுண்டே 59

எந்திரத்தை யேமூர்த்தி வடிவ மாக்கொண்(டு)
    ஏத்துகின்ற மார்க்கமொன்றுண்(டு) இயல்பென் றாலும்
மந்திரத்தின் எழுத்ததனில் அமைத்தல் நன்றும்
    மாறுபட்டும் எழுதல்உண்டு வண்மை யல்ல
இந்திரனூர் வாழ்வநித்தம் எனத்தே ராதார்க்(கு)
    எவர்சொலினும் பலதேவா யிலங்கும் செய்யும்
தந்திரத்தை யேபொருளா மதிக்கும் தன்மை
    தவத்தினருக் காகாது சகத்தோர்க் காமே 60

சக்கரந்தோய் தருதகட்டின் பெருமை யெண்ணில்
    தாவரமூர்த் திக்கும்அன்ன சரமூர்த் திக்கும்
முக்கண்உடைக் காய்சுமக்கும் கும்பங் கட்கும்
    மூர்த்திகரம் உண்டாக்கும், முதன்மைத் தாகும்
மிக்கதிரு நீற்றினைவெள் ளிலையில் வைத்து
    விதிப்படியே வரைந்தரிசி மிசைவைத்(து) அப்பால்
தக்ககும்பம் அதன்மேல்வைத்(து) ஆர தித்துத்
    தகட்டில்விட்டால் மகிமை அதிற்சாரும் அன்றே 61

**சூரியபூசைக்கு, யந்திர, மந்திரம் கூறல்**

சூரியனைக் குருவடிவாய்ப் புவியிற் கண்டு
    தொடக்கறுக்க வேண்டுமெனில், சொன்னத் தேனும்

சீரியதாம் பிரத்தேனும் விருத்த மாகச்
செய்தகட்டிற் பிரணவத்தைத் திருந்தக் கீறி
ஆரியத்து (ஆம்) என்றுள்ளிட் டிரண்டும் கூட்டி
ஆதித்தா யநமவென அறைந்து பூசித்(து)
ஈரியல்பும் பெற்றலாகும் குந்தி யாதி
எண்ணில்பலர் பெற்றனர்வம் பெனல்கூடாதே 62

### சிவவழிபாட்டுக்கு ஷி

சமனேவென்ற சிவன்வடிவம் காண வேண்டில்
சக்கரம்ஐ யைந்தறையாச் சமைத்துச் சூலம்
அமையவிட்டுச் சிவயநம என்னச் சொல்லும்
ஐந்தெழுத்தை நடுத்தொட்டே அடுக்கா மாறி
இமையவரும் போற்றுபிர ணவத்தாற் கட்டி
இதைமுதற்கொண் டவைசெபித்திட் டிறைஞ்ச லாகும்
கமலவட்டம் பூபரங்கள் இடுவார் தாமும்
காசினியில் உண்(டு)இடினும் கழிக்கொண் ணாதே 63

### சத்திபூசனேக்கு ஷி

நல்லசத்தி அருள்வேண்டிப் பலவா றுக
நவின்றிடுஞ்சக் கரங்களெண்ணி நலிய வேண்டாம்
எல்லனய வட்டத்துள் முக்கோண சூலம்
இரையஇட்டுள் அவ்வும் உவ்வம் வவ்வும் இட்டுச்
சொல்லரிய பிரணவத்தாற் கட்டி ஓர்பேர்
தோய்தரவுச் சரித்துவழி படலே போதும்
புல்லர்களுக் குண்மைநிலே சரிப்ப டாது
புகலரிய டம்பமெண்ணிப் புழுங்கு வாரே

### திருமால் வழிபாட்டுக்கு ஷி

உலகளிக்குந் திருநெடுமால் கருணே வேண்டில்
ஒருபிறைபோல் எழுதிஅதில் மம் என்றிட்டுக்

குலவுபிர ணவமதனுல் வளைத்துஓர் நாமம்
கூட்டிவழிபடலாம்முன் கும்பிட் டுய்ந்தோர்
பலருரைத்த வண்ணம்எட்டக் கரம்சொன் ஞனும்
பழுதில்லை சந்தேகப் படுதல் வேண்டாம்
கலகமிடும் அரக்கரன்னுர்க் கெமனே போலும்
கருத்துடையார் இதன்பெருமை காண்பார் அன்றே 65

### கணபதி பூசைக்கு ஷ

கட்டமுற்றுந் தவிர்த்தருள வல்ல ஞானக்
களிற்றருளே தஞ்சமெனக் கருது வார்கள்
வட்டமிட்டுள் பிரணவ மிட்(டு) அதனுட் கம்என்
மகத்தான பீசம்இட்டு வழங்கும் நாமம்
இட்டமுறச் சேர்த்துரைத்து வணங்க லாகும்
இதன்மகிமை யாரறிவார், இயம்பப் போமோ
மட்டவிழுங் கொன்றையந்தார்ச் சிவனும் முந்நாள்
வழிபட்டே புரமெரியும் வகைசெய் தானே 66

### முருகன் வழிபாட்டுக்கு ஷ

ஈறுதவிர் குகனருட்சீர் விரும்பு வார்க்(கு) ஆ
றெழுத்தலங்கா ரத்திடத்(து) ஈரிருவகைத்தாய்க்
கூறுசடாக் கரத்தில்ஒன்றை அறுகோணத்திற்
குறித்திசையச் சூலமிட்டுக், குகர மேனும்
ஊறுபடாச் சகரமா ஞலும் உள்ளிட்(டு)
ஓங்காரத் தால்வளைத்(து)ஏழ் சுழியேழ் விட்டும்
மாறுபடா திட்டுஅவற்றைப் பகர்ந்து போற்றி
வழிபடலாம் யாவும்ஒருவட்டத் திட்டே 67

### சமயாதீதம் குருவழிபாடு

குருவடிவம் அன்றியொரு தஞ்ச மில்லை
கூடிறினும் அவனுளத்தின் குறிப்பென் ரோர்ந்து

திருவருளை நாடிநிற்கும் சமயா தீதச்
செல்வருக்கும் பூசையது சிறப்பே யாகும்
சருவசடாக் கரமலது வேறென் றுகா
சட்கோண மாய்அகில சராச ரங்கள்
மருவகண்டம் இருந்தவிதம் அறிகின் றோர்க்கு
மாறுபடும் நெறியொன்றும் வயங்கா தன்றே 68

கற்புடைய மடவார்போல் ஒன்றே தெய்வம்
கருதுநர்க்கிம் முறைபோதும், கலங்கி வாடும்
அற்பமதி யாற்பலதே வுண்டென் றெண்ணி
ஆராதித் தாலும்நன்றே; அறிவுமுற்றிப்
பிற்படும்நாள் அந்தநிலை விளங்கும், காதற்
பெருக்கமுறும் தெய்வமொன்றை நடுவில் வைத்துப்
பற்பலவா மற்றவற்றை முறைபோற் சூழப்
பரிவார மாயமைத்துப் பணிய லாமே. 69

சட்சமய நூல்களினும் பரமென் றோதும்
தலையாய தெய்வங்க ளன்றிச், சார்பாம்
உட்சமயப் பரிவாரங் களையுங் கூட்டும்
உணர்வினரும் உண்டுதிக்குப் பாலர் ஆனே;
கட்செவிஆ தியகருது வாரும் உண்டு
கருத்தில்உள்ள வாறேசக் கரத்திற் பீசம்
பட்சமுடன் இடவேண்டும், இல்லா விட்டாற்
பரிந்துசெயும் பூசைமுழுப் பயன்த ராதே. 70

இருமையுந்தந் தருளவல்ல தாம்என் றெண்ணி
எதேனும் ஒருதெய்வத் தினையே நாடி
அருமையுடன் பூசிக்கில் உருமிக் கேறும்
அன்புண்டாம், சுதந்தரமுண் டாகும், அன்றி
ஒருமைபடும் ஆனாலும் பருவ மில்லார்
ஒப்பிடார்; அன்னவருக்(கு) ஓதல் ஒரில்
கருமயில்நேர் சாயலுடைத் தருணி ஞாயம்
கன்னியினுக் குணர்த்துகின்ற கதையாம்அன்றே. 71

வாரத்திற் பட்சத்தில் மாதந் தன்னில்
வருடத்தில் ஒவ்வொருநாள் வகுத்த வண்ணம்
ஈரத்தி ஞேடுவிர தாதி நோற்றல்
இருமூன்று சமயத்தோர்க் கேற்ற தாகும்
தீரத்தால் வேதமுடி வுணர்ந்து ஞான
தேசிகன்பொற் பதத்தினிலே தெரிந்தும் சித்தி
வீரத்துக் காசையுற்றுக் கிரியை செய்வோர்
விரதமுற்றால் ஒருநாளும் விலக்கொண் ணுதே. 72

கொல்லாத விரதமொன்றே மிகவும் நல்ல
குணமான விரதமற்றும் கூறு கின்ற
எல்லாமும் அதனையொக்கும் விரதம்ஆகா
இருடியர்தம் மேற்பழியென் றியம்பிக் கொண்டு
பொல்லாதார் வேள்வியினும் கள்ளும் ஊனும்
புசித்தென்றும் ஈடேருப் புலைய ராவார்
நல்லார்தம் உயிரினுமிக் கினிய வென்ன
நாடிஉயி ரனைத்தினுக்கும் நயம்செய்வாரே. 73

வேதமுத லாயநன்னூல் ஒன்றும்சொல்லா
வெறுநாம ரூபம்வைத்து மேடம்ஆதி
காதல்ஒரு பூசையெனச் செய்வார் எல்லாம்
கடையரே, அவரினத்தும் கடையாவாரை
ஓதவெனத் துணிந்துநன்குற் றுணரில் எந்த
உலகமும்மெய்ப் பிரமமென உரைக்கும் நூன்மேற்
பாதகம்சொற்(று) இந்திரன்ஆ தியர்க்காம்என்னப்
பகர்ந்தூன்வெங் தருந்துகின்ற பாவியோரே; 74

காசினியில் மானிடராய்ப் பிறந்தோர்உய்யக்
கருதிமுயல் கின்றனவாம் கருமபேதத்(து)
ஏசிலது பூசையைப்போல் ஒன்றுமில்லை
இழிவுயிர் கொன்றருந்திடல்போல் யாதுமில்லை
கோசிகன்முன் ஒருமதலை வேள்விமுன்பிற்
கொலைப்படா தளித்தவிதம் கூறக்கேட்டும்

தேசிகன்றன் அருள்பெற்ரோர் எவராஞலும்
செய்யவொண்ணு தென்றதனைத் தீர்த்திலாரே. 75

ஒருயிர்க்கும் தீங்கியற்ற ஒண்ணுதென்னும்
உணர்வுள்ளான் எவனெனினும் உஞற்றும்கன்மம்
சீருடைத்தே யெனத்துணிந்து கொள்ளலாகும்.
செப்பும்அதொன் றில்லாதோன் தேவனேனும்
பாருலகிற் பசுமேடம் ஆதியாகப்
பைம்புல்உண்ணும் மரையினும்கீழ்ப் படுவான்என்ன
யாரும்அறி தரத்துணிவுற் றெள்ளலாகும்
இவ்விதத்திற் கிசையாதார் ஈனர்தாமே. 76

## வேள்வியில் கொலை, ஊன்உணவு தகாதெனல்.

பாரதியாள் கொண்கன்அருட் புதல்வன்என்று
பலவுலகும் போற்றிசைக்கும் பரிசுற் ரோனும்
நாரதன்செய் வேள்வியில்ஓர் ஆடுதோன்றி
நாகநாட் டினர்நடுங்க நடக்கும்அந்நாள்
வீரவடி வேற்குமரன் புரந்தவாறு
வியாசமுனி உரைத்திருந்தும் வீணர்சில்லோர்
மாரன்விழா நலங்கருதிக் கொன்றூன்உண்டு
மகம்செய்வார் இதுபோலும் வம்பொன்றின்றே 77

கொலைமகம்நிட் காமியமாச் செய்துவிட்டுட்
குறுகலாம் என்போரும், குரைக்கும் நாய்ஊண்
மலைகட்குப் படைத்துமல ராகச் செய்தல்
வண்மையெனச் சொல்வாரும், மலத்தைத்தெண்ணீர்
உலையினிற்பெய் தமுதாக்கிப் புசிக்கின்ரோருக்(கு)
ஒப்பாவார் எனத்துணிவுற்(று) ஒன்றும்கொல்லா
நிலையில்நின்று தவம்புரிவா ரன்றித் தெய்வம்
நீணிலத்தோர்க் கில்லையிது நிசம்சொன்னேனே. 78

நால்வேதம் சொல்லுமெனக் கொன்றுண்ணுமல்
நானூறு கோடிமறை நவின்றிட்டாலும்
மால்வேதன் ஆதியரெல் லோரும்நேரே
வந்துரைத்திட் டாலுமுயிர் வ்தைக்கொண்ணுதென்(று)
ஆல்வேண்டும் பெருமான்நேர் வ்டிவத்தோராய்
அருந்தவஞ் செய்வார்கள்சிலர், அவர்களாவோர்
சேல்வேலொப் பாயவிழி மடவா ரேனும்
திரும்பரிய மெய்வீட்டிற் சேர்வார், அன்றே. 79

ஔவைதிரு வள்ளுவன்பட் டினத்துப்பிள்ளை
ஆதியபல் பெரியோரும், ஆர்க்கும் தோன்றச்
செவ்வையுறும் நெறிஅருளே எனப்பல்வாறு
தெரிவித்தும் கொலைமுயன்(று)ஊன் தின்னும் பொல்லார்
கௌவைபடும் எனதுலரயோர் பொருளாமென்னக்
காண்பாரோ, யாவரையும் கருமம் முன்னின்(று)
றிவ்வையத் தசைக்குமெனு மொழி பொய்யல்ல
யானிது சொற்றிடலும்அதன் இயல்பாம் அன்றே. 80

**தீவினைப்பயன் நுகர்ந்தேயாருமென்பது.**

செய்தவினை செய்தாரைச் சேருமென்று
சிவசமயத் தார்முதலோர் செப்பலன்றிக்
கைதவராம் சமணர்களும் நண்டுதன்னைக்
காதலித்துக் கால்முறித்துத் தின்றபாவம்
எய்தலுற்றூற் கையழுகும் குறைநோய் தோன்றும்
எனத்தமது நூலிடத்தில் இயம்பினுர்கள்
பொய்தவிராப் புலைச்சமயத் தினில் உள்ளாரும்
புவியறிய வினையை நொந்து புலம்புவாரே. 81

### அந்தணர் செய்யவேண்டுவது.

வேதியன்ஆ ருயிர்க்குமிடர் செய்தி டாமல்
விதித்துளநற் கருமமட்டும் விளைத்திட் டானேல்
நீதில்விண் ணூ ரிடத்தல்ஒரு தேவ ஞகிச்
சிரரம்பை யாதியரைச் சேர்ந்து வாழ்வான்
நீதிமன்னர் தொழில்விரும்பிச் செய்தா னேனும்
நிலைக்கிழிவே, மற்றிருவர் நெறியிற் சென்ருல்
மாதிரத்தில் அறிவினரால் இகழ்ச்சி யெய்தி
மறுமையினும் நிரையமதில் மன்னு வானே 82

### செங்கோல் மன்னன் சீர்த்தி

மாநிலத்தில் உள்ளஉயிர்த் தொகுதி யாவும்
மகவினமாம் எனக்கருதும் மனமும் வானோர்
தாம்நினைத்தற் கரியபெரும் புகழும் தோய்ந்து
தரணிமுழு தொருகுடைக்கீழ்த் தாங்குந் தன்மைக்
கோன்,இகழ்தற் கடங்காத பலபோ கங்கள்
குலகிரியின் பகைவனெடு கூடத் துய்த்(து)ஓர்
யோநியிற்புக் கவதரித்திட் டாலும், முத்தி
உறுவதற்காம் படிமுயலும் உரம்கொள் வானே. 83

### கொடுங்கோல் அரசன் நிலை.

மன்னனெனப் பலர்கூடி வணங்கக்கண்டு
மகிழ்ந்திறுமாந்(து) அறமுழுதும் மறந்து பார்மா(து)
இன்னலுறக் கொடுங்கோல்மிக் கியற்று கின்றோன்
எழுநான்கு கோடியென இயம்பத் தோன்றும்
புன்னரகிற் கொடியதாய ஒன்றில் வீழ்ந்து
புவியொடுவான் உள்ளளவும் புலர்வான். ஓர்கால்
துன்னகிலத் துருவாகி வந்திட் டாலும்
சூகரத்திற் கடையாகிச் சுழல்வா னன்றே. 84

### வணிகர் மாண்பும் மறத்தின் தாழ்வும்.

மட்டில்பெரும் புகழ்உயர்வென் றறிந்து கொள்ளும்
வணிகரெல்லாம் அளகையிற்போய் வாழ்ந்து மீள்வார்
கொட்டிவைத்த பொன்னிருந்தும் சிறிதும் நல்காக்
குணத்தினராய் ஊதியமேற் குறிப்பு மீறி
வட்டியினிற் பலிசையிட்டு வழக்குப் பேசி
மானமுளார் தமைக்கெடுத்து மகிழ்ச்சி கூறும்
செட்டிகளெல் லாம்நிரயக் குழியில் வீழ்ந்து
திரும்பாமல் எந்நாளும் தியங்கு வாரே 85

### வேளாளர் தன்மையும் புன்மையும்.

மழைவிரும்பிப் பயிர்விளைக்குங் குலத்தோர் தம்மில்
வண்டமிப்பா வலர்முதலோர் மகிழ நல்கித்
தழைதருமெய்ப் புகழ்புனையத் தக்கோர் எல்லாம்
சந்ததமும் சுவர்க்கதலந் தன்னில் வாழ்வார்
கழைமதனன் கன்னன்,நெடு மால்,கிரீடி
காரியெனப் போற்றுநர்க்கும் கயவ ராகி
உழைநிகர்கட் கணிகையர்க்கே உதவும் பொல்லார்
ஒருநாளும் நரகினைவிட் டொழியார் அன்றே 86

### மாதர்கள் வண்மையும் வன்மையும்.

கனியனைய செந்துவர்வாய் மடவார் தம்மிற்
கணவன் உரைப் படிநடக்கும் கற்பினோரே
முனிவரினும் தேவரினும் மேன்மை யெய்தி
மூவுலகும் போற்றிசைக்கும் மொய்ம்ப ராவார்
அனியருடன் கலந்தணையா ளெளினும் கொண்கன்
அலமரப்பல் வாறுதுயர் அளிப்பா ளாகில்
குனிதருமெல் லுடற்பாட்டி நூல்கள் என்றும்
கூறியவா றுள்ளபெருங் கூற்றன் னளே 87

குலங்கடந்து திருவேடம் புனைந்தேற் றுண்டு
கூறறிய தவமுயலுங் கொள்கை யோரில்
இலங்குலகிற் குதவிசெய விரும்பு வோரே
ஏற்றம்அவ ரேமுதல்வீட் டிடத்திற் சேர்வார்
கலங்கரிய கடலுடுத்தாள் வருந்தக் காலி
கதறிடக்கொல் வார்மகிழக் கண்டிட்டாலும்
மலங்கலுறு மற்றனது நலமே வேண்டி
வருந்துவோர் எதுபெறினும் வம்பாம் அன்றே 88

### மூர்த்திவணக்கத்தில் உயர்வும் தாழ்வும்.

ஒருபரமே அளவிறந்த கோடி வண்ணம்
உருவெடுக்கும் எனும்ஞாயம் உணர்ந்திட் டாலும்
திருவுருவம் அத்தனையும் சமமென் றெண்ணித்
தெண்டனிட்டுப் போற்றிசைத்துத் திரியொண் ணாது
குருவடிவ மாகவரும் மேன்மை தோய்ந்து
கொல்லாத பூசைகொள்ளும் கொள்கைத் தாகும்
பெருமகிமைத் தெய்வமுற்றும் நலமாம் என்னப்
பேணலாம் மற்றவற்றூற் பிழையுண் டாமே. 89

### முன்னைய வினைப்பயனின்றன்மை.

நன்மைமலி சிலர்,தீமை நுகரக் கண்டு
நானிலமுற் றீன்றளித்து நலியச் செய்யும்
வன்மையுறு தெய்வமிலை யென்பார், அந்தோ
வரகரிசி நிறைந்திருக்கும் மனையில் வாழ்வோன்
நென்மிகவும் பயிர்செயினும் உண (வு) அதன்றி
நிகழ்த்தும்இது கொளப்போமோ? நிறைநாள் ஆறல்
பின்மகிழ்ந்துண் டிடற்காகும், என்ப தோரார்
பிறிதினுக்கும் இதுசாட்சி பேசுங்காலே; 90

### நல்வினை, தீவினை, தவம் இவையெனல்.

நல்வினையால் வரும்பயனிற் பெரிது கல்வி
ஞானம் எனும் இவையேயாம், நணுகொண்ணுத

பொல்வினையால் உறும்துயரிற் கொடிது நோயும்
புன்மிடியுமே; அருளில் பொய்யர்க்(கு) ஆகா
வல்வினையாம் தவம்தரும்ஊ தியம்,எண் சித்தும்
மாறியினிப் பிறவாத வாழ்வு மேயாம்:
சொல்வினைமுன் றினுக்கும்ஒரு துணை,தன் சிந்தைத்
துணிவென்றே அறிவறிந்தோர் சொற்றுளாரே. 91

நன்றனைத்தும் தம்தலைமேற் சுமத்திக் கொண்டு
நவைமுழுதும் அவனதென நவில்வார் சில்லோர்;
கொன்றருந்தல் ஆதியதம் வினையென் றெப்பிக்
குணமுழுதும் அவனதெனக் கூறல் வேண்டும்
என்றறைவார் சிலர்; செயல்முற் றெமதே யாம்என்(று)
இசைப்பர்சிலர்; சிலர்ஏனை யென்றே சொல்வார்
ஒன்றறம்மற் றென்றுபிழை என்றால், வாதம்
உடன்உண்டாம் பக்குவம்ஒத் தொளிரும் அன்றே. 92

மாந்தருக்கோர் கண்கண்ட தெய்வம் போன்று
மநுநீதி முறைநடத்தும் மன்ன ராவர்
தாந்தரையிற் பிழையணுகா வண்ணங் காக்கும்
தன்மைபோல், அவர்கோன்மை தவறு மாகில்
ஆய்ந்தமறைத் துணிவதனால் தவஞ்செய் துண்மை
அருளடைந்த பெரியோர்கள் அறங்கள் ஓதிச்
சாந்தகுணத் தாற்றிருத்தில் இசையா ராகில்
தண்டத்தாற் சீர்படுத்தல் த'ருமந் தானே. 93

இவ்வுலகத் திடைநடக்கும் நன்மை தீமைக்(கு)
இயன்றமுதற் காரணந்தான் ஈசன், அப்பால்
வெளவுபெருந் தவசி, அப்பால் அரையன், அப்பால்
மாந்தர்எனச் சொலலாகும்; மதியில் லாதார்
தெவ்வுடல்கின் றவிர்வேல்வேந் தனை,அன் னேற்கும்
திடுக்கமுறும் மன்பதையைச் செப்பு வார்கள்
எவ்வுலகத் தினும்நிறைவுற்(று)யாவும் தானாய்
யாதிடத்துந் தோயாமல் இருப்ப தொன்றே 94

கோரவன்கட் புலியனைய கொடுங்கோல் மன்னன்
குவலயத்தைத் துயர்ப்படுத்தக் கொன்றான் உண்ணும்
நீரவரே கொக்கரிக்கும் காலம் வந்து
நேர்ந்ததென்றால் சகிப்பரிதாம், நெடுமூச் செய்தி
ஈரமுள்ளார்க் கவர்மனம்போற் கருணை செய்யும்
எம்பிரான் றனைத்துணிவுற்(று) இகழ்தற் கஞ்சா
வீரர்களைச் சிறியவர்என் றெண்ணொணாது
விளம்பரிதாம் நலங்கருதும் மேன்மை யோரே 95

ஆனிளங்கன் றுதியவும் அருந்தும் பொல்லார்
அரணழித்துத் தருசிறைகொண்(டு) அறத்தைப் போக்கி
நானிலமெல் லாங்கவரும் நாள்வந் தாலும்,
நன்மறைகாண் பரிதாய நவையுற் றாலும்,
வானிடத்தும் பூதலத்தும் பிலத்தும் எங்கும்
மருவியென்றும் அழியாது வாழும் உண்மைக்
கோனிருக்கின் றான்எனவே நம்பும் அன்பர்
குழுவினது பெருமை,அவன் கூறற் பாற்றே 96

வாதியெனப் பலர்கூடித் தருக்கம் செய்வார்
வங்கம்என்னும் பெயருரைத்தால் மாழ்கிச் சோர்வார்,
நீதியுறும் யோகியெனப் பல்லோர் சொல்வார்
நிசரூபம் வேறெடுத்து நிலவ மாட்டார்,
நீதில்பர ஞானியெனப் பேசிக் கொள்வார்
செகத்தினுக்காம் உதவியொன்றும் செய்தற்(கு) ஆகார்
வீதிதோறும் வீரரெனத் திரிவார் செங்கோல்
வேந்தன்விடும் சிற்றூட்கும் மெலிகு வாரே 97

பழிபாவம் எனுமிரண்டும் தோய்வு றாத
பண்பினதாய்ச் சிறந்தோர்முன் பழகப் பெற்ற
தொழில்யாவும் துணிந்துசெய்யத் தகும்என் றாலும்
சூத்திரன்ஓர் வனத்தினிடை சூழ்ந்து செய்த
வழிபாடு கெட,வாளால் இராமன் கொல்லும்
வம்பனைய வாமவற்றில் மருவொண் ணாதால்

அறியாத பேரறிவிற் சீரி யோரை
அடுத்(து) அவர்சொற் படிமுயல்கை அழகாம் அன்றே 98

பலவிதமாப் பல்கலையிற் பகரும் நூலின்
பயன்முழுதும் பகுத்தறியிற் பழுதி லாத
புலமையுடைப் பெரியோர்தம் பதத்திற்(கு) ஆளாய்ப்
புகன்றபடி வினவிஉய்யப் புகுதல் மேலாம்;
மலநிகளம் துகளடையச் செய்தோ னுன
வசிட்டனும்இப் படியுரைத்தான்; மலரோன் ஆதிச்
சிலருரைத்திட் டாலும்உயிர் செகுத்தல் ஒன்றும்
செயக்கூடா தெனத்துணிவோர் தெளிவுள் ளோரே. 99

உடலிடத்திற் பரிசுத்தம் வெண்ணீ றுதி
உரைபிறழாத் தகைடிவாக்கில் ஒழியா உண்மைத்
திடம், மனத்தில் உள்ளவர்எத் தொழில்செய் தாலும்
சீரியதே யாகும்எனச் செப்ப லாகும்
கடலனைய கருமமுற்றும் இதனுள் தீரும்
காசினியெல் லாம்படைத்துக் காத்துப் போக்கும்
அடலுடையான் பத்தியுபா சனையின் சீலம்
அவனருளால் அறிந்தமட்டில் அறைகுவேனே. 100

---

முதலாவது கருமகாண்டம் நிறைவெய்தியது.

ஓம்
குருவே துணை.

# இரண்டாவது

# பக்திகாண்டம்

---

## உபாசனைக்கு உருவநாட்டம் உயர்வெனல்.

பத்தியென்கை தெளிந்தஉபா சனையே யாகும்
பாருலகில் உள்ளபல தீர்த்தம் ஆடல்
துத்தியம்சேர் கோயிலெங்கும் வணங்கி ஏன்ற
தொண்டுசெய்தல் ஆதியவாச் சொல்வார் சில்லோர்;
சிந்திநல்க மாட்டாது, சமய வாதம்
தீர்ந்துகளி கூரும்வண்ணம் தெளிவி யாது
முத்தியெவ்வா றுதவும்அவை கருமமே, யான்
முன்னுரைத்த காண்டமதின் முறைமையாமே 1

கருமபலம் சித்திதரும் எனமுந் நூல்கள்
கழறுவதும் உண்(டு)எனினும் கருதிச் செய்யும்
தருமமொடு பாவங்கள் முழுதும் ஓர்ந்து
தக்கபயன் தருவற்கோர் தலைவன் உண்டே
இருள்மருவு தாருகா வனத்துள் ளார்போல்
இல்லையென்றால் எவ்விதத்தும் இழிவே யெய்தும்
குருமரபால் நன்குணர்ந்து தெளியா ரெல்லாம்
குணிக்கரிய பலவாறு குளறு வாரே. 2

ஆலயத்தால் எந்திரத்தால் கும்பந் தன்னால்
ஆராதிக் கின்றவரும் அகத்தி னூடோர்
கோலமமைத் திருப்பாரே யாகில் அன்னோர்
குறித்தபயன் சீக்கிரம்கை கூடும்; இந்த
ஞாலமதைப் பார்க்கவந்த கண்ணே கண்ணு
நாடில்வெகு நாள்கழியும் நலமா காது
சாலவுருத் தியானமொடு பாடு பட்டால்
சாக்கிரத்தும் தோன்றும்இது சரதம் தானே 3

எந்தவித நூலெனினும் குருவா வந்தார்
எவரெனினும், உருவமொன்றை எண்ணிப் போற்றும்
அந்தநிலேயே உயர்வாம் சித்தி முத்தி
அனைத்தும்நல்கும் எனும்உறுதி அடைந்தி டாமல்
மந்தணங்கள் ஆயிரம்சொற் றிடினும் பொல்லா
வஞ்சகமாம், அலதுமதி மயக்க மாகும்;
இந்தநெறி செல்லாமல் உய்ந்தோர் இல்லை
இதுசரதம் முக்காலும் இயம்பி னேனே 4

அக்கரத்தின் உருவமொன்றை அறியா மூடன்
ஆனாலும் சாத்திரங்கள் அனைத்தும் தேறும்
மிக்கபுகழ்ப் புலவர்சிகா மணியா னாலும்
விளங்கும்ஒரு மூர்த்தியினை விரும்பி நாடித்
தக்கவண்ணம் பிரசன்னம் கண்டா லன்றிச்
சகமறியச் சித்திமுத்தி சாரொண் ணாது
திக்கனைத்தும் நிறைந்தபர தெய்வத் துண்மை
தெரிந்தவர்போற் பிதற்றுநர்வாய்ச் செருக்கு வீணே 5

ஆயிரமாம் முழுக்கம்பம் தன்னில் ஏறி
அளவிறந்த கோடிவித்தை ஆடி னாலும்
மீயிருந்தே தியாகமதும் பெறக்கூ டாது
மேதினியில் வரவேண்டும் என்பார் பலலோர்;
ஆயினதன் பயன் உணரிற் சமயக் கூட்டம்
அத்தனைக்கும் ஆனதெய்வம் அகண்டம் என்னும்
வாயினவ ராலும் பிறர்போல் மூர்த்தி
வடிவமொன்று பற்றிஉய்யும் வழக்குத் தானே 6

அநுபூதி யடைந்தவர்தம் நூல்கள் ஆராய்ந்(து)
அநுட்டிப்போர் உபாசனையே அருமை என்பார்
உனும்நூல்ஓர் கலையிலிருந் ததனை மற்றோன்
ஒருகலையில் மொழிபெயர்க்க, ஒருவன் பாடப்

பினும்ஓர்மா னுடன்உரையாற் பொருள்சற் றோர்ந்து
பிதற்றுவோர்க் கதன்மகிமை பிறங்கும் கொல்லோ
தனுவாதி யவைதருவான் உண்டென் றெண்ணிச்
சார்தருமெய்ப் பத்திநிலை தவறுண் ணுதே. 7

கரும்பினது சாற்றினைக்கற் கண்ட தாகக்
காணமுயன் றிடிற்சிறிது காலம் செல்லும்
விரும்புகற்கண் டினைச்சாறுச் செய்ய நண்ணில்
விரைவில்ஆம்; அதுபோல்எவ் விடத்தும் மேவும்
பெரும்பரத்தைக் குருவடிவ மாகச் செய்தல்
பிரயாசம்; நாடுமவர் பிரியம் போல
வரும்புனிதக் குருவடிவை அகண்டம் என்ன
மதித்தல்எளி(து) இதுபழையோர் வாய்பா டாமே. 8

ஆன்உடலம் முற்றும்அதன் பால்உண் டாதற்(கு)
ஆதாரம் ஆம்எனினும், அகிலத்துள்ளார்
வேன்உறுமென் மடிவழியிற் கொள்ளு மாபோல்
வேதங்கள் ஆகமங்கள் விளம்பும் தெய்வம்
தான்உலகம் முழுமைக்கும் இடமா நிற்கும்
தனியகண்டம் ஆனாலும், தவம்செய் கின்றோர்
பானுநடுக் குலவுறுசற் குருவா நாடிப்
பணிந்திறைஞ்சிக் கண்டுபெரும் பதஞ்சேர் வாரே. 9

தெய்வம்ஒன்றுண்(டு) அதன்அடிமை யான்என் றோதிச்
சித்தியொன்று மில்லாமற் றிரிகின்றோர்தம்
பொய்வழக்கை ஆராயிற் பாட்டி வைத்த
புதையல்உண்டென்(று) இறுமாப் போர் புந்திபோலும்:
மெய்வழிநின் றுபாசனையாற் சித்தி பெற்று
விளங்குகின்றேன், சமயநெறி விழைவோ னேனும்
கைவலியாற் பொருள்சேர்த்துக் கோடி யாக்கிக்
காசினிசொல் லிடக்கொடியும் கட்டினேனே 10

ஒளியில்லா மணிவிளக்கொன்(று) உண்டே யாகில்
உன்னியவா றிவ்வுலகத் துளூற்றும் சித்திக்
களியில்லா உபாசனைஉண்(டு) என்னத் தேறும்
கருத்தினரே, கல்விநலம் கைக்கொண் டோர்கள்
அளியில்லா நெஞ்சினராய் அகண்ட போதம்
அடைந்தவர்போற் பலபிதற்றி, ஆனை; நன்னீர்த்
துளியில்லா வனவேடர், ஆதி காணில்
துடிதுடிப்போர் உணர்ச்சிமுற்றும் தோடம் தானே 11

மூர்த்திஉருக் கண்டமென்றும், அருவ மாக
முன்னுவதே அகண்டமென்றும், மொழிவார் பல்லோர்
வேர்த்திலங்கும் மேனியொடோர் கூலி யாளாய்
வியன்மதுரை யாற்றருகில் விளங்கி ஞானச்
சீர்த்திமலி பாண்டியன்கைப் பிரம்பால் அந்நாள்
சினந்தடித்த அடி, அளவில் சீவர் மீதும்
பூர்த்தியதாப் பட்டவிதம் உணர்ந்தி டாத
புல்லறிஞர் என்(று)அவரைப் புகல லாமே: 12

ஒற்றிநகர்க் கோயிலில்வாழ் தெய்வந் தன்னை
ஒருமரத்தின் நீழலில்வந் துறையு மாறு
சொற்றிடுவான், முதலையுண்ட மதலை வந்து
தோன்றிடவுஞ் செய்தான், மெய்ச் சோதி எங்கும்
உற்றிருக்கும், போக்குவர வில்லா தென்ன
உரைசெய்தோர் பலர் உடல்வீழ்ந் தொழிய மாய்ந்தார்
முற்றிகழக் காண்பதெண்ணி முயலா ரெய்தும்
மோட்சமெல்லாம் நன்குணரில் மோசந்தானே 31

யாவும்வல்ல(து) எல்லவர்க்கும் பொதுவாம் என்கைக்(கு)
இசைவுற்றும் சிலசமயத்(து) ஈன ராவார்
தேவுருவம் ஆகாதென் றிசைக்கின் றூர்கள்:
செகதலத்திற் கண்ணூரத் தெரிசித் தன்றி

மேவுமுத்தி யில்லையெனச் சொல்லும் நூல்கள்
வேணதுண்டு பிறந்திறக்கும் வினையுள் ளார்க்(கு)அப்
பாவுரையும் வெவ்வேருத் தோற்றும் அந்தோ
பக்குவம்இல் லார்க்குரைக்கிற் பயன்ப டாவே; 14

வாதவூர் அடிகளுக்காக் குதிரை கொண்டு
வந்திடலுய், அமுதனைய மதுரச் செஞ்சொற்
போதமலி தரும்அருண கிரிக்காத் தூணிற்
புரவலன்முற் றோன்றியதும், பொருவப் பல்லோர்
ஓதனந்தம் விளையாட்டும் பழுதென் றெண்ணும்
ஊறுடையார் அருட்பேறும் உறுவார் கொல்லோ
பாதகரிற் றலையாவார் மனித ரேனும்
பசுமரையிற் ருழ்ச்சியெனப் பகர லாமே. (15)

முன்னுளதோர் காண்டத்தில் விளங்கு கின்ற
மூலமந்தி ரங்களும்எந் திரங்கள் தாமும்
பன்னும்உபா சனைக்குரித்தே ஆம்என் ருலும்
பாவனையே முக்கியமாம், பகுத்துப் பேசார்
உன்னுதலில் பாவனு தீதம் நன்றென்(று)
ஓதுகின்ற மாந்தர்பலர் உலகத் துண்டு
தன்னுளத்தை ஒருகுறியில் நிறுத்தச் சொன்னல்
சளப்படுவார் அதுபோலும் சார்பொன் றின்றே 16

ஆலயத்து விக்கிரகந் தனையே நாடி
அகங்களித்தல் இளம்பருவம், அறவோர் சொன்ன
நூலகத்தில் உள்ளபடி மனத்தாற் செய்து
நோக்குவது நடுப்பருவம், நுவன்ற ஆசான்
கோலமதே மூர்த்தியென நம்பி அன்பாற்
குறிப்பஅமுற் றியபருவம், கூறும் மூன்றும்
சாலநினைந் திடுவார்க்குச் சித்தி முத்தி
தருபவே பொன்றுணர்வார் தவம்உள் ளோரே 17

விக்கிரக நாட்டத்தால் உய்ந்த பேரும்
மிகவுண்டு, சிலரைமுன்னம் விளம்பி யுள்ளேன்
அக்கிரகண் ணியமான குரவன் நாட்டம்
அறிஞர்சிலர்க் கேஆகும் அனேகர்க் காகா(து)
உக்கிரமாம் சரிதமொடு புராணம் கூறும்
உருவங்கள் யாவருக்கும் உவகை நல்கும்
எக்கிரகங் களும்மூர்த்தி வடிவ மேஎன்(று)
இயம்புநரும் உண்(டு)அதனுல் இலக்க மின்றே 18

மந்திரத்தை மணிஉருட்டிச் செபித்துக் கொண்டு
மனத்தகத்தில் உரியதெய்வ வடிவ மின்றித்
தந்திரவித் தைக்காரர் தமக்கும் ஒல்கித்
சாத்திரம்பொய் என்றிகழ்ந்து சலிக்கின் றோர்க்கும்
இந்திரன்ஊர் ஆதியநற் பதங்கள் எய்தும்
யாதுமின்றி வீணுகா(து) இகத்தி னூடும்
சந்திரசூ ரியர்உளநாள் வரையும் கீர்த்தி
தழைப்பதொரு குறியில்நின்று ாதிப் போர்க்கே. 19

ஒருருவம் தனைமுதலிற் றியானிப் போருக்(கு)
ஒவ்வொர்அவ யவந்தோன்றும் ஒருங்கு தோன்று(து)
ஆருயிர்தத் தளிக்கமனம் சிதறி ஓடும்
அனந்தவித சங்கற்பம் அடுக்காத் தோன்றும்
பூருவபுண் ணியபலத்தால் மாறி மாறிப்
பொருத்திமிகப் பாடுபடும் புண்ணி யோர்க்கே
ஊரும்எறும் பாற்கருங்கல் குழிந்தாற் போல்ஆங்(கு)
ஒருவாறு நிலைத்தின்பம் உதவும் அன்றே 20

பலர்நெடுநா ளாகவுபா சனைசெய் தாலும்
பலனென்றும் தோன்றுமற் பரத விப்பார்
சிலர்துவக்கும் நாள்முதற்றெட்(டு) அதற்குத் தக்க
சீர்பெறுவார், இவ்விரண்டு திறத்தி னோர்க்கும்

இலகுறுமெய்ப் பயன்வருமென் றாலும், சோம்பல்
என்பதுவும் திருத்தியுமே இகலாம் அந்தோ
குலதெய்வம் சாக்கிரத்தில் வந்து வேண்டல்
கொடுக்குமட்டும் சாதிக்கை குணமாம் அன்றே. 21

நனவில் உள்ள சொப்பனமும் தாண்டி நேரே
நாட்டம்அறி தரச்சிலகால் நண்ணி னாலும்
இனமெனத்தான் அழைக்கும்போ தெல்லம் தோன்றி
ஏகெனும்போ தேகுமட்டும் இளைக்கொண் ணாது
மனமகிழ்ச்சி யால்முயற்சி குன்று மானல்
வந்தபடி அநுபவங்கள் மாறிப் போகும்
கனகமுத லாம்பிரதி பந்தம் கோடி
காணுறினும் துணிவைவிட்டுக் கலங்கொண் ணாதே 22

கரவில்உபா சனையில்நின்று வெகுவாத் தேறிக்
கருத்தறிய ஆனந்தக் கடலில் மூழ்கிப்
பரவுதிரு வாக்கனைய சிலபே றற்றும்
பந்தத்தாற் றடைபட்டுப் பதைப்பார் உண்டு
நரர்இகழப் பட்டாலும் அவரைத் தேவர்
நன்கறிவார், ஒருசிறிது நாளில் வேண்டும்
வரமுழுதும் பெற்றாலும் பெறுவார் அன்றி
மறுபிறப்பில் வாழ்ந்தாலும் வாழ்வார் அன்றே 23

வினையைஒரு பொருட்டாக மதித்து வாழும்
வீணரெல்லாம் உபாசனைக்கு விலக்கே யாவார்
பனையனைய துயர்உறினும் தெய்வம் தோன்றிற்
பஞ்சனைய தாகும் என்போர் பக்கு வத்தோர்
நனைமலர்ச்செங் கடம்பணியும் திண்டோட் கந்தன்
நல்லருளால் அருணகிரி நாதன் அந்நாள்
புனைஅலங்கா ரத்தினிடை நாளென் றுள்ள
பொருவில்கவிப் பொருள்சாட்சி புகலும் அன்றே 24

*பத்திநெறி யேஉயர் வென் றுணரா மாந்தர்
பதரனையார், அவர்பலரும் பழைய கன்மம்
புத்தியில்நின் றூட்டுமெனப் புகல்வார் அந்தோ
புகலிநகர்க் கவுணியன்றன் புதல்வன் அந்நாள்
அத்தியைப்பெண் உருவாகச் செய்தான் மற்றோர்
அருந்தவன்கல் மிதந்திடச்செய்(து) அமண்போர் வென்றான்
இத்திறல்போன் றுள்ளனவும் வினையாம் சொல்லோ
இயம்புதிரு வருள்வலியென் றியம்ப லாமே 25

மானிடருக்(கு) அயனமைத்த வயது நூறே
மலையில்உள்ள சித்தர்அதை மறுத்தார் அன்றி
நானிலத்தோர் அறிந்தகுகை நமச்சிவாயர்
நன்கிருநூ றாண்டிருந்தார் நாறிப் போன
மேனியுடைச் சினையாடு பிழைக்கச் செய்தார்
வேறும்இவை போல்வனவாம் விந்தை யாவும்
ஆனியிலா மூர்த்தியுபா சனைச்சி றாமென்(று)
அறியாதார்எவரெனினும்அசடர்தாமே 26

எச்சமயத் தோரெனினும் தெய்வந் தன்னை
ஏதேனும் ஒருவடிவாய் எண்ணிப் போற்றி
அச்சமறுஞ் சித்திவழி முத்தி வீட்டில்
அடைவதுண்மை யானாலும் அகண்ட மென்னும்
நிச்சயமுற் றிருந்தாலே பிறவி தீரும்
நிகழ்த்தும்அது தருவதற்காம் நெறிகள் ஆறே
பொச்சமில்அவ் விகற்பம்முன்னம் சொற்றேன் இங்கு
பொருந்துறும்நற் றியானவகை புகல்கின் றேனே 27

---

* பக்தி நெறி — உபாசனை மார்க்கம். கவுணியன் — ஞானசம்பந்தர்.
அருந்தவன் — அப்ப மூர்த்தி. வலியென்பது செயல் என்பதாம்

சௌரம். சூரிய மூர்த்தி விளக்கம்.

ஆரியநூல் சொலுமூர்த்தி தையா னலும்
அநுட்டிப்போர் தவமுதிர்ச்சி யாகும் நாளிற்
சூரியமண் டலத்தினையே நாடு வாரால்
சொல்லும்அந்த மூர்த்திக்குத் தொண்டர் எண்ணும்
சீரியகோ லங்களெல்லாம் பொருந்த மாகும்
தியானமின்றி உள்ளபடி தெரிசிக் கின்ற
பேரிகத்தும் பரத்தும்நலம் உறுவா ரேனும்
பிறவாத வீடுமட்டும் பெறமாட் டாரே 28

சூரியர்கள் 12–இருப்பினும் வேறுபாடில்லை என்பதாம்.
பரத்துவமும், உபாசிக்கும் முறையும்

சுடரவனே முதலாய கிரகம் என்னும்
சோதிடரும், புராணவழி துணிகின் றோரும்
அடலுறுபன் னிருவடிவஞ் சொல்வார், மேடம்
ஆதியவீ தியின்விகற்பம் அன்றி யில்லை
திடமலிநெஞ் சுடன்இரவும் பகலும் ஆகத்
தியானிப்போர் பலவிதமாத் திகைக்கொண் ணுது
புடவியிற்சற் குருவடிவம் ஆதி யாகப்
புகல்பவற்றே தேனும்ஒன்றுப் போற்ற லாமே 29

பகர்தருபன் னிருவடிவத் தொன்றை நெஞ்சாற்
பற்றிடலும் சம்மதமே, பதுமந் தந்த
மகனுணர்த்தும் சமயவிகற் பத்தில் மூர்த்தி
வகைமுழுதும் அவற்றினுக்குள் வயங்கும் கண்டீர்
இகழ்புறுபுன் சமயத்தோர் எவரா னலும்
இரவிவெயிற் படலாகா தென்ன மாட்டார்
திகழொளியெல் லாமும்அதன் அமிச மன்றோ
திங்களும்செந் தீயும்அதிற் சேர்ந்த தாமே 30

முத்திவிழை வோன்குருவாய்க் கல்வி வேட்டோன்
முகிழ்முலைப்பா ரதியாய்ப்போர் முடிக்கும் ஆசை
வைத்திருப்போன் வயிரவனுக் கருது மாபோல்
வாஞ்சித்த வகைக்காம்எவ் வடிவ மாயும்
சித்திசெய்தற் கானதெய்வம் யாதென் றுய்ந்து
தெரியுங்கால், செங்கதிரோன் அன்றி யில்லை
எத்திருவும் ஒருங்குபெறக் கருதி ஞலும்
ஏகமாய்ப் பேதமின்றி எண்ண லாமே 31

முப்பொழுதில் மூர்த்தியொரு மூன்று மாக
முன்னுகின்றோர் பற்பலர், அம் முறையுந் தாண்டி
எப்பொழுதும் ஒருமூர்த்தி வடிவ மாயே
எண்ணுகின்றோர் சிற்சிலரிவ் இரண்டும் அன்றி
மைப்பொழுதைப் பகலில்வர வழைத்தோன் போலும்
மகத்தான சித்தர்தங்கள் வடிவாக் காண்பார்
மெய்ப்பொழுது காட்டுகின்ற தெய்வம் ஒன்றே
விளம்புதெய்வம் யாவும்அதுள் விளங்கும் அன்றே 32

ஒன்றுபொருள் என்றுணரும் உணர்ச்சி யின்றி
ஒருகோடி தெய்வம் உண்டென் றுழன்று நாளும்
நன்றுநமக் கீதெனவோர் வடிவம் போற்றும்
நரரேனும் பரிதியெனும் நாதன் றன்னைத்
தன்றுணைத்தெய் வத்தின்விழி என்பார் வாழும்
தலமென்பார் அகில்சரா சரம்உண் டாக்கும்
முன்,துலங்கப் படைத்தபொருள் என்பார், அன்றி
முரண்கொடுவே றிகழ்ச்சியொன்றும் மொழிந்தி டாரே. 33

வெளிமுழுதுந் தன்அரசு நாடாக் கொண்டு
விதுஉடுவா தியபிறவும் விளங்கச் செய்து
களிபெறுமெச் சீவருக்கும் கண்க ளாகிக்
கருத்தாகிப் பொதுமுதலாங் கருணைத் தெய்வம்

ஒளிமலிசெஞ் சுடரவனே என்னும் ஞாயம்
உணராரை மனிதரென்றும் உரைக்கப் போமோ
புளிமுதலாம் மரமறியும் நெருஞ்சி யாதிப்
பூடறியும் அதன்மகிமை புகலொண் ணுதே 34

வானத்தில் வருபரிதிக் கடவுள், பாரில்
வணங்குநர்க்காம் குருவடிவா வரல்உண் டென்னும்
ஞானமின்றி நகைத்திகழும் நரரே கேண்மின்
நளிர்பொழிற்குந் தலத்தரசன் நண்ணி யீன்ற
பானல்விழிச் சிறுமிமன விருப்பங் கண்டு
பணைநெடுந்தோட் காளையெனப் படிவங் கொண்டு
தானணைந்தோர் மகவளிக்கை வினவி லீரோ
தவமுதிர்ந்த பெரியோர்பொய் சாற்றி டாரே 35

பூவருக்கத் துயர்ந்தகஞ்சம் அறியும், தொல்சீர்ப்
பொலிதருசெஞ் சுடரதனுட் பொருந்த நெஞ்சாற்
பாவனைசெய் திடும்வடிவின் சென்னி யொன்று
பதமிரண்டு தோள்நான்கு படையும் பூணும்
ஆவலுற்ருர்க் கானபடி யென்னச் சொன்ஞல்
அறுசமயத் துள்ளாரும் ஆமாம் என்பார்
சேவலொலித் தல்ல (து)உதி யாதென் ருேதிச்
செருக்கடைவார் கவுமாரச் சித்தர் தாமே 36

**சைவம். சிவமூர்த்த விளக்கம்.**

சைவசம யக்கடவுள் எளிய தல்ல
சதுர்வேத சித்தாந்தச் சமயம், மற்றை
ஐவகையும் அதிலடங்கும், பரிதி கண்ணும்.
அசலமகள் மணையாட்டி, அடல்மால் ஊர்தி
கைவழுவை முகனும்மயிற் குகனும் பாலர்,
கழறரும்பல் புறச்சமயக் கயத்தில் ஆழும்
பொய்வழக்கர் தாமும்அட்ட மூர்த்தி என்னப்
புகன்றிட்டார் அவற்றின்அயற் பொருளு மின்றே 37

**சிவவடிவவகை. தட்சிணாமூர்த்தி. (குரு வடிவம்)**

சீலமறைக் கிழவன்மக்கள் ஒருநால் வர்க்கும்
சிவஞானச் செல்வமுறச் செய்யவேண்டி
ஆலநிழற் பாலொருசற் குரவனாகி
அவிர்சடையும் கண்டிகையும் அணிவெண் நீறும்
சூலமும்உற் றுடுக்கையும்முத் திரையுங் காட்டித்
துணைப்பதத்தில் ஒன்றையொன்று சுமக்க வைகும்
கோலம்நினைப் பவர்இறப்பும் பிறப்பும் நீங்கிக்
குலவுபர வீட்டினிடம் குடிகொள் வாரே. 38

**சோமாஸ்கந்த மூர்த்தம்**
**குழந்தை முருகனுடன், உமைகூடியிருப்பது**

மான்மழுவோ(டு) அபயவர தமுஞ்சேர் தோள்கள்,
வயங்குமுக்கண் திருக்கனிவாய் வளைதோய் காது,
பான்மதியும் புனல்கொன்றை சடிலச் சென்னி,
பவளநிறம், நீலகண்டம், பதுமப் பூந்தாள்
தோல்மருவும் உடை,பாம்(பு)என்பு அணிந்த சீலம்
சொல்வனமற்(று) யாவும்நன்கு துலங்கச் செங்கை
வேல்மதலை உமைவாமத் திருந்த கோலம்
வெள்விடைமேற் கருதுநரை வினைஅண் டாதே. 39

**சீகண்டபரமேசர் உபாசனை.**

சீகண்ட பரமேசன் என்னும் அந்தத்
திருவுருவே தவமுதிர்கால் சேணிற் றேன்றி
ஆகண்ட லாதியர்க்கும் அவரை மாய்க்கும்
அந்தகனேர் அவுணருக்கும் அகிலத் தொன்பான்
மாகண்டத் தவத்தோர்க்கும் அரசர் கட்கும்
வரங்கள்எல்லாந் தருவதென்கை வம்பன்(று) அன்பால்
தீகண்ட மெழுககதுபோல் உருகுஞ் சிந்தைச்
சீரியர்குற் றேவல்களும் செய்யும் அன்றே 40

### நடராசமூர்த்த உபாசனை.

முயலகன்றன் முதுகில்வலத் தாள்வைத்(து) ஏனை
முண்டகத்தாள் தூக்கிவலப் புறமாய்ச் சாய்த்து,
வியனுடுக்கை வலப்புறத்து மேற்கை தாங்க,
மேல்இடக்கை அனல்ஏந்த விரும்புந் தொண்டர்
அயர்வொழிக்கும் அபயமற்றை வலக்கை காட்ட
அடுத்தசெங்கை எடுத்துளதாள் அதனைத் தூண்டக்,
கயல்விழியாள் பாம்புபுலி முதலோர் மன்றிற்
காணநடம் பயில்சிவனைக் கருதல் நன்றே. 41

### உருவபாவனையையன்றி அருவநாட்டம் ஆகாதெனல்.

ஆகமவே தங்கடந்த பொதுவ ளுகி
அம்பலத்தில் நடமாடும் அரனை நாடிப்
போகமொடு வீடுபெற்றோர்க்(கு) அளவா ராலும்
புகலரிதென் றுலும், அருட் பொலிவுண் டாமுன்
ஏகவெளி யென்றதனைக் கரைத்துப் பார்த்தால்
இளம்பிஞ்சிற் பழுத்தபழம் எனவீ ணுவார்.
தேகமும்மற்(று) அவனுகத் துலங்கி னுலும்
தியானம்விடார்க் கெப்பேறும் சித்தி யாமே. 42

### வயிரவர் உபாசனை.

உடையினெடு பத்தினியு மின்றி யீசன்
உயர்கரங்கள் உடுக்கையொடு நாகம் ஏந்தப்
படையிலுயர் திரிசூலம், பிரமன் சென்னிப்
பரிகலத்தோ டெடுத்தொருநாய்ப் பரியில் ஏறிச்
சடைகுறுகத் திருமேனி யிளமை காட்டச்
சஞ்சரிப்பான் வயிரவப்பேர் சாற்று வார்கள்
வடையினெடு தேனமைத்துப் போற்று வார்மேல்
வருபகையெல் லாங்கணத்தில் மடிக்கும் அன்றே. 43

இத்தகைய வயிரவமாம் மூர்த்தி மேன்மை
இகதலத்து மானிடருக் கிலங்கி டாது
சித்தரறி வார்களன்றி உலகங் காக்கும்
திருநெடுமால் ஆதியராந் தேவர் ஓர்வார்,
புத்தர்முத லோரைவெட்டித் தொலைக்கும் வீரம்
புனைகுவார் களும்உணர்வார் போற்று வார்பால்
மெத்தவுஞ்சீக் கிரத்திலருள் புரியும் கண்டீர்
வெறிநீரா தியபடைப்பார் வீணர் தாமே 44

**வீரபத்திரர் உபாசனை முதலிய வேறன்றெனல்**

பூதர்புகழ் வீரபத்தி ராதி யாவும்
புகலுமிவற் றுள்ளடங்கும், புறம்பொன் றில்லை
ஏதமறும் இலிங்கமெனும் மூர்த்தியொன் றுண்(டு)
எச்சமயத் தேவும்அதி லிருந்து தோன்றும்
பேதமுறு பீசங்கள் பலவா றுகப்
பேசிடினும் ஐந்தெழுத்தைப் பிரிக்கொண்ணாது
சீதளசந் திரனெனவெண் ணீற்றுற் றோன்றும்
தேசிகர்சொற் கேட்டுணர்ந்து தெளிதல் நன்றே 45

ஒருபாதத் துருத்திரனென் றேது மூர்த்தி
ஒன்றுளது, நடுவிலரன் ஒருபால் வேதன்
திருமால்ஓர் பால்அரையி லிருந்து தோன்றும்
திரிமூர்த்தி யென்கைவம்பு, தெய்வமொன் றென்(று)
அருநீதி யால்உணர்ந்தோர்க்(கு) ஆகும், சொல்லும்
அறுசமயத் தோரும்ஒப்பி டார்என் றுலும்
மருவாரைச் சிரித்தெரித்தோன் சமயத் துள்ளார்
மட்டும்ஒரு வேலையதை வணங்கு வாரே 46

ஐந்துமுகம் பத்துத்தோள் உடைய தாயும்
அறிவகன்ற சிலபெரியோர் ஆரா திப்பார்,
இந்துமுடிச் சென்னிஓரா யிரமும் தோள்கள்
இரட்டியுமா நினைத்திடுதற் கெவரா லாகும்?

முந்துகவி களில்உரைத்த மூர்த்தி யொன்று
முன்னின்ருற் பின்காண்கை முறையாம் ஏனும்
விந்துநிலை நாதநிலை விளங்கி னன்றி
விரிவான பேதபுத்தி விலகி டாதே 47

### சாந்தேயம்-சத்திவடிவம்.

சகளவடி வானதெய்வத் தொகுதி யாவும்
சத்திவடி வேயெனும்சாத் தேயன் றன்னை
இகழ்வரிதென் ருலும்அதற் கினிய வாருய்
எண்ணிடுத லேமிகவும் ஏற்ற மாகும்
பகாரும்நிட் களம்மனதிர்(கு) எட்டி டாது
பழையதவ மில்லாத பாவ மாந்தர்
திகழ்தருதாய் முலைநீத்துத் தந்தை யார்பின்
சிறுமுலைவேட் டயர்மகவிற் றிகைப்பார் அன்றே 48

### பாலை-உபாசனை. (குழந்தை வடிவில் தியானித்தல்)

மூன்றுவய தல்ல(து)ஐந்து வயதுள் ளாளாய்
முத்திரையும் உற்பலத்தின் முகுளப் பூவும்
தோன்றும்இரு கையினளாய் ஆயி ரத்தெண்
தோடுறும்வெண் டாமரையிற் சுரர்கொண் டாட
ஊன்றுதிரு வடியினளாய்ப், படிகம் போலும்
உருவினளாய், உடையிலளாய், உன்னு வார்க்கு
வான்துதிக்கும் பெருவாழ்வும் சித்தி யெட்டும்
மறுக்கரிய தனிவீடும் வாய்க்கும், அன்றே 49

ஈனமற்ற தத்துவமாம் வாலைத் தாயை
இயம்பும்அவற் ஞென்ருமென் றிசைக்கொண் ணுது
ஞானபர யோகியருக் கான மூர்த்தம்
நான்முகத்தோன் ஆதிஐவர் நண்ணும் தெய்வம்

கானநறுங் கொன்றையணி சிவன்அந் நாளிற்
கனவேள்விக் கனலூடு கண்ட கோலம்
தேனவிழ்செந் தாமரைக்கை விரல்க ளால்முன்
திருமால்ஈ ரைவர்களைச் சிருட்டித் தாளே 50

## புவனை-உபாசனை.

பாசமுடன் அங்குசமும் மேற்கை தாங்கப்
பகர்அபய வரதம்வைத்துப் பசுமைத் தாகித்
தேசவிர்பல் பணியணிந்து வய(து)ஈ ரெட்டாய்த்
திகழ்வாளைப் புவனையெனச் செப்பு வார்கள்
பூசனைசெய் வார்க்குவரம் உதவும் ஆசைப்
பொலிவுள்ளாள் அவள்மகிமை புகன்றோ யாது
நீசர்உண(வு) அவட்காமென் றமைத்துப் பல்லோர்
நீணிலத்தில் மடிந்தார்கள் நிசம்சொன் னேனே 51

## சத்திக்கு ஊன்படைப்ப தாகாதெனல்.

பலராமன் ஆதியர்மேற் பழிசொற் றிந்தப்
பாருலகிற் சிற்சிலர்ஊன் பருகி யாங்கள்
நலமீறும் சாத்தேயர் என்னச் சொல்வார்
நல்லறிவன்(று) ஆதலினால் ஞானம் எய்தார்
சிலவாறு வித்தைகள்ஈண் டியற்றி னாலும்
திரும்பாத பாழ்நரகிற் சேர்கை திண்ணம்
உலகோரா யிரங்கோடி உதவும் அம்மைக்(கு)
ஊன்விருப்பம் உண்டாமென்று ரைக்கொண் ணாதே 52

## துர்க்கை வடிவ பேதங்கள்.

வையிரவன்கைக் கொண்டசின்னம் நான்கும் தாங்கி
மழைமுகிலும் கண்டுவெட்கும் வடிவந் தோன்ற
வெயில்உமிழும் வக்கிரதந் தாதி யெய்தி
வியன்உரையோ டுலவுமவள் வீரதுர்க்கை

கையில் அபய வரதமுடன் சங்கம் ஆழி
கவின்தந்தால் விண்டுதுர்க்கை; கைஒ ரெட்டாய்ப்
பயில்வடிவந் தானும்உண்டு, கருதி யன்பாற்
பரவுவார் விருப்பமுற்றும் பலிக்கும் அன்றே 53

## வீரமாகாளி உபாசனை

ஆயிரஞ்சென் னியும்அவற்றின் இரட்டிக் கையும்
அணிந்தபல படைப்பெருக்கும் ஆளி மீது
மேயிலங்குங் கரியமலை யனைய சீரும்
விளங்குமகா காளியெனும் வீர சத்தி
வாயிகத்தாற் பரவினர்சிற் சிலர்க்கும் வேண்டும்
வரமளித்தாள் எனவுலகோர் வகுத்துச் சொல்வார்
பேயினத்தின் அரசாகிப் பாலை காக்கும்
பெற்றியினுள் என்றிடினும் பிணங்கி டாளே 54

## வாமபூசனை நேமமல்ல எனல்

காளிதுர்க்கை யாதியவாம் மூர்த்தி கட்குக்
கனபிரியம் ஊனிலெனும் கடையர் உண்டு
கோளில்உண வமைப்பதுவே நல்ல மார்க்கம்
கொலைமுயன்று வழிபட்டால் குடிகே டுண்டாம்
ஆளியெனும் வாகனமும் பலவா ருகும்
ஆயுதமும் கொளும்நிமித்தம் அறமில்லாதார்
கேளிரொடு நாசமுறச் செய்து நல்லோர்
கிளைமுழுதும் வாழவைக்கும் கிருபை தானே 55

## கலைமகள் உபாசனை

வாலையுறும் ஆதனமும் நிறமும் தோய்ந்து
வளர்புவனை வயதினளாய் மலர்க்கை நான்காய்,
ஓலையிற்செய் திடுஞ்சுவடி படிக மாலை
ஒண்கலச முத்திரைஒன் றௌிரக் காட்டிச்

சேலையும்பல் பணியினமும் வெண்மைத் தாகித்
திருக்கருணை விழிபொழியச் சிறந்த வாணி
காலையென்றும் மறவாமற் றியானிப் போர்க்குக்
கவிப்புலமைத் திறமைமுற்றும் கைக்குள் ஆமே 56

### திருமகள் உபாசனை

செங்கமலப் பூமிசைநாற் கைய ளாகித்
திகழ்இருமேற் கையினும்அச் செழும்பூ ஏந்தி
அங்கமலம் அனையமற்றைக் கரங்கள் தம்மில்
அபயமொடு வரதம்உற, ஆகம் போலும்
தங்கமயச் சேலையுடுத் திரண்டு வேழம்
தாங்கியபொற் கும்பநன்னீர்த் தாரை வாய்ந்த
மங்களச்செங் திருமகளை மறவா தார்க்கு
மண்ணுலகத் திடத்தும்விண்ணூர் வாழ்வுண் டாமே 57

### பார்வதி உபாசனை விளக்கம்

புவனையைக்கை யிரண்டினளாய்க் கருத லுற்றுற்
பொருப்புமக ளெனநன்கு புகல லாகும்
பவளநிற மாகநினை வாரும் உண்(டு)ஓர்
பாவலவன் தனக்கமுது படைக்க நண்ணி
அவன்மகளாச் செல்லல்முத லான ஆடல்
ஆயிரம்உண்(டு) அத்தனையும் அகிலம் சொல்லும்
சிவன்முயலு மாதவத்தால் மனைவி யாய்ப்பின்
செவ்வேலாய்க் குகன்மகிழும் செயம்செய் தாளே 58

## பிற சத்தி பேத விவரம்

யோகியர்க்கும் நிலைபிறழத் தக்க மோகம்
ஒருநொடியில் வரவழைக்கும் உரம்கொள் வாளாம்
மோகினியோ டுள்ளபல சத்தி மூர்த்தம்
மொழிகுவார் அத்தனையு முன்னல் வீணே
தாகியாய் ஒருமூர்த்தி வடிவைத் தொட்டுச்
சாதித்தால் சகலசித்தும் வீடு மெய்தும்
பாகியற்சொல் மடநல்லார் எவரும் ஆன
பரைமகிமை யெவராலும் பகரொண் ணதே 59

## வைணவம்-திருமால் உபாசனை

சக்கரமும் சங்கும்இரு மேற்கை தாங்கத்
தனிஅபய வரதமற்றைத் தடங்கை காட்ட
மைக்கவினர் மேனியுஞ்செம் பவள வாயும்
மலர்விழியும் குழைக்காதும் மகுடம் ஆதி
மிக்கமணிப் பொலிவும் அம்பொற் றுனைச் சீரும்
விளங்குதிரு வடித்துணையும் விரும்பி நாடித்
திக்கனைத்தும் புரந்தருளும் மாயோன் றன்னைத்
தெரிசிப்பார் வினைமுழுதும் தீரும் அன்றே 60

அனந்தனெனும் ஆயிரம்வாய்ப் பாம்பின் மீதே
அலர்மகளும் நிலமகளும் அருகில் வைகி
மனந்தழைத்த பேருவகை யொடுதம் கையால்
மலரனைய திருவடிகள் வருடத், தேவர்
இனந்தமது குறைமுழுதும் பகர்ந்து போற்ற
யாவும்அறி துயில்கூர்வான் இனிய கோலம்
தனந்தனிவீற் றிருந்துமிகச் சிந்தித் துய்ந்தார்
தம்பெருமை யான்விளம்பத் தக்க தன்றே 61

## கண்ணபிரானைப் பற்றிய சிந்தனை

தேவகிதன் வயிற்றுதித்த நந்த கோபன்
திருமனையில் வளர்ந்(து)ஆயர் சேரி மாதர்
யாவருக்கும் ஒருகொழுநன் ஆனுன் மஞ்ஞை
இறகணிந்த மணிமுடியும் இருதிண் டோளும்
பாவவினைச் சகடுதைத்த பதுமத் தாளும்
பசியமர கதநிறமும் பவள வாயும்
ஆவனமற் றியாவுமிக நினைய வல்லார்
ஐவர்களிற் பார்த்தனிகர் அடல்கொள் வாரே 62

தயரதன்றன் மகவாகி அரக்கர் கோமான்
தலையொருபத் தறத்தடிந்தோன் தடங்கை வில்லும்
வியன்மவுலி யாதியபூண் அணியும் சீரும்
விரைமலிநீ லோற்பலம்நேர் மேனிப் பொற்பும்
நயமருவு நகைமுகமும் பணைத்த தோளும்
நளினமலர்ச் சேவடியும் நாடி நாடிப்
பயமகன்ற வாழ்வடைந்து மகிழ்ந்து பின்னர்
பரமபதத் துற்றதொண்டர் பலரா வாரே 63

## நரசிங்க வடிவ நிலை

பெரும்பாவத்(து) இரணியன்றன் உதிரம் உண்ணப்
பிரகலா தனன்அழைக்கும் பெற்றி கண்(டு) ஓர்
கரும்பாரத் தூணில்வரும் சிங்க மூர்த்தி
கனவடிவந் தனைமனத்தாற் கருதப் போமோ
விரும்பார்வத் தினுக்கிசையச் சென்னி ஒன்றுய்
விளம்பிநினைப் பார்க்குமத வேழக் கூட்டம்
திரும்பாமற் பயந்தோட வெல்லும் ஆண்மைத்
திறன்முதலா வனபொருந்தச் செய்யும் அன்றே 64

குதிரைமுகம் பன்றிமுகம் மச்சம் கூர்மம்
 குலவுருவம் கொள்வனபோற் கோடி மூர்த்தம்
விதிவருபே ருந்தியினுன் றனக்குண்(டு) அந்த
 விபரமுற்றும் உணர்ந்தெவர்தாம் விளம்பப் போகும்
துதிபெருகும் ஆனைமுகத் தாழ்வான் புட்கோன்
 தொல்அநுமான் ஆதியர்க்குத் தொண்டு செய்து
கதியடைந்தோர் தாமும் அந்தச் சமயத் துண்டு
 காத்தருளற் கவனலதோர் கடவுள் இன்றே 65

புத்தசம யக்குரவன் ஆதி யோரும்
 புவியளந்தோன் அமிசமென்கை பொய்யன் றேனும்
செத்தபிணத் தூனருந்தல் ஆதி யாய
 தீயகுற்றம் சிலவற்றிற் றிளைக்கும் பெட்பால்
உத்தமமாங் கதியடைய வேண்டும் நல்லோர்
 ஒருக்காலும் உபாசிக்க ஒண்ண(து) அல்லாப்
பித்தருக்கத் தகையினவே இனிதாத் தோற்றும்
 பிழையில்லா தனவுரைக்கிற் பிணங்கு வாரே 66

## காணபத்தியாம். கணபதி வழிபாடு

ஆனைமுகம் முனைக்கோடொன்(று) ஒடிந்த கோடொன்(று)
 அங்குசமும் பாசமும் தோய்ந் தவிர்மேற் கைகள்
ஏனையகை களில்முந்நாள் ஒடித்த கொம்போடு
 இனியமாங் கனி, அதனில் இயைந்த பூட்கை
வானைநிகர் பெருவயிறு வனசப் பூந்தாள்
 மணிப்பணிகள் பவளநிறம் வயங்கு செம்பொற்
ருனைபெருச் சாளிவா கனத்தோ டெண்ணில்
 தனிப்பொருளாங் கணபதியின் தயையுண்டாமே 67

### வல்லபை கணேசர் தியானம்

இளம்பிறைத்துண்(டு) அம்பொன்நெடுஞ் சயிலக் கங்கை
• இதழிஅறு(கு) ஆத்திதும்பை யென்ப யாவும்
வளம்பெறச்சங் கரனேபோற் றுலக்கிப் பச்சை
வல்லவையை இடப்புறமா மடியின் மேல்வைத்(து)
உளம்பெரிது களிகூரத் துதிக்கை தன்னால்
உரகபடந் தொட்டுறுமோர் உம்பல் மூர்த்தி
சளம்படவோட் டாதடியார் தம்மைக் காத்துச்
சகலவிளை யாடல்களுந் தருவ தாமே 68

### கணபதி வடிவ பேதம்.

தனியேநின் றருடுகின்ற மூர்த்தி யொன்று
தடங்கரத்தால் வல்லவையைத் தாங்கிக் கொண்டு
கனிவோடு நடம்பயிலும் வடிவ மொன்று
கரங்கள்பதி னென்றாகக் காண்ப தொன்று
நனியார்வ முறும்மனித வதன மாக
நண்ணலொன்(று) இவ் வாறுபல நவில்வார் மேலோர்
சனியாத வீடுபெற வேண்டு மாகில்
தக்கதொரு மூர்த்தமெண்ணித் தவம்செய் வீரே 69

### கௌமாரம்-முருகன்வழிபாடு.

இந்துமுடித் தவிர்ந்தசடைச் சிவபி ரானும்
இமவான்தந் துளமகளும் ஈன்ற சேயாய்
ஐந்துகரக் கணபதிக்கோர் துணையாய்ச் சென்னி
அதனிடத்திற் சிறுசடிலம் அமைந்த தாகிச்
சிந்துரவன் னத்தினதாய்க் குலிச மோடு
திரிசூலம் மேற்கரத்திற் றிகழ்வ தாகி
எந்துணையாம் அபயவர தமும்பொற் றாளும்
இசைவதாய் ஒருபொருள்வெற் பிடந்தோ றுண்டே 70

### வள்ளி தெய்வயானை சமேத முருகன் உபாசனை

பகரும்இளங் குமரனுக்கு வயதைந் தாறு
பதினாறு வயதாய படிவங் கொள்ளில்
இகழ்வரிய குமாரனெனச் சொல்ல லாகும்
ஏமநிறத் தொருமடவாள் இடத்தில், நீல
மகளொருத்தி வலப்புறத்தில் நிற்கக் காணில்
வரந்தருசுப் பிரமணிய மாம்;தோ ளாருய்த்
திகழ்வாளும் கேடகமும் நடுத்தோள் கொள்ளில்
திறற்கார்த்தி கேயனெனச் செப்பு வாரே. 71

### சண்முகமூர்த்தி உபாசனை.

இருதலைச்சூ லம்குலிசம் பாணம் சாபம்
எழில்வாள்கே டகம்ஆழி யிகல்வெண் சேவல்
பொருவில்அங்கு சம்பாசம் அபயம் மேலோர்
போற்றிசைக்கும் வரதமெனப் புகலீ ராறு
மருவுதிண்டோ ளினனுய்ச்சண் முகமுள் ளோனை
மனக்கமல மிசையிருத்தி வணங்கு வார்க்குத்
திருவருட்சத் தியின்மகிமை யுணர்ந்து ஞான
சித்தியொடு முத்திபெறுஞ் சீருண் டாமே. 72

### தண்டபாணி மூர்த்தி தியானம்.

முண்டிதமும் கோவணமும் கீளும் தண்டும்
முழுநீறும் பாதுகையும் முறுவல் வாயும்
கண்டிகையும் கதிர்வேலும் இரண்டு தோளும்
கமலமல ரடித்துணையுங் காட்டும் மூர்த்தி
தொண்டினர்சிற் சிலர்உளத்திற் சடிலத் தோடு
தோன்றலும்உண்(டு) அதன்பெருமை சொலஒண் ணாது
குண்டிகைக்கைத் தவமுனிவர் அறிவார் அன்னோன்
குமரகுரு பரனெனும்பேர் கொடுநின் றோனே 73

**குருவடிவ நாட்டம்.**

அரியகுரு பரன்மகிமை மொழியப் போமோ
அறுசமயத் தொன்றுயும் அவிர்வான் அப்பால் .
உரியசம யங்கள்முற்றும் நானே யென்பான்
ஒன்றிடத்துந் தோயாமல் ஒளித்துங் கொள்வான்
பெரியபொருள் அவனலது மற்றொன் றில்லை
பேசுகின்ற மூர்த்தமெல்லாம் பிறங்கக் காட்டித்
தெரியவல்ல பேரறிஞர் தம்மைத் தேற்றித்
திருவடியிற் கலந்துகொள்ளும் திருடன் றானே 74

உருநாட்ட மேகுறியாம் என்னத் தேறும்
உண்மையுபா சகர்கூட்டத் துயர்ச்சி யானோர்
குருநாட்டக் காரர்,பிறர் தாமும் காணக்
கோயிலுக்குள் வாழ்வடிவைக் கும்பிட் டெண்ணி
வருநாட்டக் காரர்இளம் பருவம் உள்ளார்
வகுத்துரைக்கும் இவ்விரண்டும் வம்பன் றென்னும்
திருநாட்டந் தோய்பவரே சமயா தீதச்
சித்தர்இது மற்றவராற் றெளியொண் ணுதே 75

பூவுலக முழுதும்ஒரு சுமையாக் கொண்ட
புயங்கம்உமை சிறுவிரலின் பூணும் என்றோர்
பாவுரைக்கும் அதுபகர்வாய் எளிய தல்ல
பட்டமரம் பழுத்துதிரப் பாடல் கண்டீர்
மேவும்எத்தே வுரு(வு)எனினும் உள்ள வாரு
விரும்பிநினைந் திடற்குமன விசாலம் போதா(து)
யாவும்வல்ல குருவடிவைக் கருதல் நன்றும்
இயம்பிடினும் பருவமில்லார் இசைந்தி டாரே 76

### உபதேசகுருவே உண்மைப்பரம் எனல்

காணாத தெய்வவடி வொன்றை நாடிக்
கருத்துருகும் இளம்பருவக் கார ருக்கு
மாணுருங் குருமகிமை யெடுத்துச் சொன்னால்
மனிதபா வனைதோற்றி வருத்து மாபோல்
நாணாமல் எச்சமயத் தினரும் போற்றும்
நல்லபொருள் குருவெனவே நாடும் மேலோர்க்(கு)
ஏனாரும் எத்தேவின் புகழ்சொன் னாலும்
இவனுளத்தின் கற்பனையென் றிலங்கும் அன்றே. 77

பைந்தருவின் வனம்வரைநீள் சிகரி மீதோர்
பாரம்வைத்துப் பேணிடினும் பார்மின் னாளே
அந்தநெடுங் கோபுரமும் கூட்டித் தாங்கும்
அதுபோல்எக் கடவுளுக்கா ளாகி நாளும்
சிந்தனைசெய் தாலும்எல்லாம் வல்ல தான
தெய்வமே பயனதருகை திண்ணம், ஏனும்
சந்தமும் கண்டகுரு வடிவை நாடிற்
சனியான மனம்அதிகச் சளம்செய் யாதே. 78

### நால்வகை உபாசகரில் உயர்வு இவர் எனல்

மந்திரமட் டுரைப்போரிற் சிலைசெம் பாதி
வடிவம்நினைப் போர்உயர்ந்தோர்; மற்றன் னோரிற்
புந்தியினால் உருவமைப்போர் மேலாவார்; அப்
புலவரினும் குருவையெண்ணும் புனிதர் மிக்கோர்
தந்திரர்இந் நால்வரினும் சிறந்தோர் நாளும்
சலியாமற் சாதிக்கும் தவத்தின் பண்பால்
இந்திரவி யுள்ளமட்டும் அழியாக் கீர்த்தி
எய்தினோர் எனத்துணிவுற் றியம்ப லாமே 79

### உபாசகர்க்குத் தடையான சூர்நிலைகள் இவையெனல்

ஒருமூர்த்தி வடிவைநினைந்(து) உபாசிக் கின்றோர்க்(கு)
ஒவ்வாத மனமுடையார் உறவா காது
பொருள்வாதை யென்கைக்கன விலும்ஆ காது
புலையினொடு கொலையும்அன்ன பொய்யும் ஆகா(து)
உருமேறெத் தார்ப்பரிக்கும் கோபம் ஆகா(து)
ஊர்கள்தொறும் போய்ப்பலவா(று) உழலல் ஆகாது
அருமாந்த மங்கையர்கற் பழிக்க நாடும்
அதிமோகம் ஆகாதென றறைவார் அன்றே 80

### மந்திர செபத்தின் மாண்பு

உருவேறத் திருவேறும் என்னு மாற்றம்
உலகிலுள்ளார் களும்உரைப்ப துண்டென் றுலும்
கருவாதை நீங்கிஉய்கைக் கான ஞானக்
கண்விளங்கப் பெற்றோரே கருதுவார்கள்
ஒருபீசாக் கரத்துக்கோர் இலக்க மென்ன
ஓதுவார் பலர், ஒ(வ்) வொன்றிற் கொவ்வோர் கோடி
மருளாமற் செபித்தேனும் சித்தி செய்ய
வல்லோனே அறிவறிந்த மகனு வானே 81

### கடவுட் காட்சி சித்தியாகுமுன் மகிழ்வு கூடாது

செபமொன்றே குறியாமென் றெண்ணிக் கொண்டு
சிந்தைஅடங் கிடும்நெறியைச் சிந்தி யாமல்
விபரங்கள் யாதொன்றும் தோன்று வண்ணம்
வெகுவிரைவாச் சொல்லிடினும் வீண்போ காது
சபதங்கள் பேசிநன்றுய்ச் சித்தி யாமுன்
தலைகொழுத்து வித்தையெண்ணித் தவிக்கொண் ணுது
கபமிஞ்சு மரணமுண்டென் றஞ்சி வேண்டும்
கடவுளைச்சாக் கிரவெளியிற் காண்கை நன்றே 82

### உபாசகர்க்கு வேண்டிய உண்மை நெறி

ஆகாய மொன்றேயென் றறிந்திடாமல்
அங்கத்தின் உட்கருதி அயர்வார் பல்லோர்
யோகாங்கம் அதுவேயாம் என்றெந் நாளும்
உலகினரும் ஒப்பிடுவ துண்டென் றாலும்
தேகாதி யாவினுக்கும இடமா நின்ற
திருவெளியிற் கண்டுதெரி சித்தா லன்றி
மோகாந்தம் போகாந்தம் இரண்டுங் கண்ட
முனிவர்பெறும் வேதாந்த முடிவெய் தாதே 89

பாவனைபோல் வருந்தெய்வம் ஒன்றே யென்னப்
பலகோடி வேதங்கள் பகர்ந்திட் டாலும்
தேவருக்கு மேலாய பருவந் தோய்ந்த
சித்தர்களே நன்கதனைத் தெளிந்து கொள்வார்
பூவலயத் துழல்வோர்கள் ஒத்து வாயாற்
புகன்றாலும் அந்தரங்கப் புலையாட் டோயா(து)
ஏவலுஞ்செய் திடப்பெறினும் அறிவில் லாராய்
இறந்துபிறந் திடற்கிசைந்தோர் எண்ணி லாரே 84

### அருட்சித்தி பெற்றவரினும் மேல்கீழ் உண்டெனல்

தெய்வசித்தி பெற்றாலும் மேல்கீழ் உண்டு
சிலர்தமக்கு வேண்டுமட்டிற் செய்து போவார்
மைவளர்க்கும் உலகினுக்கு வேண்டும் நன்மை
வகையனந்தஞ் செய்துசிலர் வானிற் றேய்வார்
பொய்வழக்கன்(று) ஆண்டானும் புகலி யூரிற்
புண்ணியனும் புகன்றவற்றிற் பொருந்தும் சாட்சி
பைவனப்புக் கரும்பாம்பில் ஆடுஞ் சித்தன்
பகரும்இரு விதநலமும் படைத்திட் டானே 85

### அநுபவத்தால் செருக்கடைதல் கூடாதெனல்

கனவிடத்திற் றெய்வம்முன்னைப் பிறவி யாதி
  கழறிடினும் சிறிதுசொற்போல் கைவந் தாலும்
மனவெளியின் சாக்கிரசொற் பனத்திற் காலை
  மாலையில்வந் தேகிடினும் மகிழொண் ணாது
தினகரனு தியர்அறியக் கண்முன் நேரே
  சேவைநல்கி வேண்டுகின்ற திறமுந் தந்தால்
பனகம்நிகர் பொல்லார்க்கோர் உவணம் போன்று
  பாருலகும் வானுலகும் பரிக்க லாமே 86

### உபாசனையின் உயர்வு தாழ்வு

தொட்டவுபா சனைநலத்த தாகிற் கல்வித்
  தோற்றமுண்டாய்ப் பலபல்கவி சொலுஞ்சீர் எய்தி
அட்டதிக்கிற் றெய்வங்கள் பலவும் ஒன்றென்(று)
  அறிகின்ற பேரறிவும் அமையும், அப்பால்
இட்டமுற்ற படியாடும் சித்தி யெட்டும்
  இயம்பரிய தனிவீடும் இலங்கும் இன்றேல்
துட்டனெனும் பெயாகொடுததுத் துன்ப மூட்டிச்
  சுடுகனலாம் நரகினிலும் தோய்க்கும் அன்றே 87

### உபாசகர்க்கு வேண்டும் உயர்நிலை

நல்லவுபா சனையெனினும் எளிய தல்ல
  நனிவிலெனக் கனவினிலும் நாட்டம் வேண்டும்
சொல்லளவிற் களிக்குமையல் ஒழிக்க வேண்டும்
  தொல்லுலகின் நிலையுணரும் சூழ்ச்சி வேண்டும்
வல்லபரம் இத்தகைத்தென றறிய வேண்டும்
  மகத்தான பெரியோரை வணங்க வேண்டும்
வில்லனைய நுதலாரை வெறுக்க வேண்டும்
  வேற்றுயிர்கொல் லாவிரதம் வேண்டும் அன்றே 88

### பெண்ணாசையைவிட ஊன், உணவு கொடிதெனல்

வாளிநிகர் விழியாரே தவத்தோர்க் காகா
வன்பகையென் றளவிறந்த வகைநூல் சொல்லும்
தேளினேர் குணத்தாளாய் வலிதில் ஈர்த்துத்
தினம்உபரி சுரதமுயல் தீயாள் தன்னைக்
கோளிலனென்(று) ஒப்புமொரு தவத்தோன் றன்னிற்
கொன்றருந்து கின்றதவன் கொடியோன் அந்தோ
மாளினுஞ்சோர் வடையாது சாதிக் கின்ற
மனவுறுதி பெற்றிடினும் வம்பா வானே 89

### வைராக்கியம் ஒருபடி, அது அனுபவிகட்கு வேண்டுவதில்லை

மலைமுகட்டி லேறிநிலத் துருளத் தெண்ணீர்
வார்கடலில் நடுக்குதிக்க வாட்கஞ் சாமல்
தலைகொடுக்கத் தீயில்விழத் தக்க வீரம்
சாரும்உபா சகர்க்குரிய தருமமேனும்
சிலையெழுத்தே நிகர்சமயாதீத ஞாயம்
திகழ்வுற்றால் அந்தநிலை சிதறும், ஆனால்
புலைமுதலாந் தீநெறியிற் புகுமா றேதிற்
போனபடி மீளவந்து பொருந்து மன்றே 90

மானவயி ராக்கியத்தால் இறந்தோர் கோடி
மனங்களிக்குந் திருவருட்சீர் வாய்ந்தோர் கோடி
ஆனவித மிவ்விரண்டும் அறிந்துற் றாலும்
அந்நிலையிற் பெயராதார் அனேகர் உண்டு
தானறிந்த தெய்வத்தின் வடிவ மெண்ணித்
தவம்புரிவ துத்தமமாம். தைய லாரில்
ஈனமொழி யொன்றுசகி யாமல் வீணே
இறந்தவரும் பற்பலருண் டிகலோ கத்தே 91

### அருள் பெற்றவன் செயல் போற்றப்பெறும்

தேடரிய தெய்வத்தின் அருள்பெற் றுள்ளோன்
செய்வனபொல் லாதெனினும் செகம்கைக் கொள்ளும்
ஆடல்முற்றும் ஆடிஅவன் மறைந்த பின்னர்
அத்தனையும் விழாவாயும் அவிரும் ஏனும்
மூடருவப் பதுகருதிப் பாவந் தன்னில்
முயல்வதழ கல்ல, முன்னோர் முறைகுன் றாமல்
வீடடைதற் கிடையூறென் றில்லா நன்மை
விளைத்திடலே உத்தமமாம் விளம்பி னேனே 92

### நல்லோர் செயலும் தீயோர் செயலும்

தேவரென்ன அசுரரும்பல் வித்தை முன்னாள்
செய்தனரென் றேபலநூல் செப்பு மேனும்
மூவர்முத லோர் அமரர்க் குதவி யாகி
மொழியுமற்றை யோர்க்கிலாய் முடித்திட் டாற்போல்
சீவகரு ணையிற்சிறந்தோர் நிறுவு மார்க்கம்
சிதைந்தாலும் பின்வருவோர் தேற்றிக் காப்பார்
பாவரமைத் திடுஞ்சமயம் வளர்த்திட் டாலும்
பகைத்தொருவன் தவம்புரிந்து பாழ்செய் வானே 93

### உபாசனையில் உலகநன்மை உயர்வு. தன்னலம் தாழ்வு

உலகினுக்கு முதலாகித் துணையு மாகும்
ஒண்பரிதி மண்டலத்தும் உபாசிக் கின்றேன்
இலகுநலம் அத்தனையும் விளைத்துப் பொல்லாங்(கு)
யாவையுந்தீர்த் திடக்கருதும் இயல்பெய் தாமல்
சிலகருமந் தவிர்ந்துதன துயிரீ டேறும்
சீர்பெறலே அருமையெனத் தியங்கு வானேல்
பலகறைப்பூண் விழைந்(து) அரையன் புதல்வன் வாடிப் 94
பரதவித்து வசமிழக்கும் பண்பொப் பாமே

### முத்திநிலை யாவர்க்கும் ஒருவிதமல்ல

கல்லதனால் எறிந்தாற்கும் சிவனன் றீந்த
    கழலிடமே நால்வர்களுங் கலந்தா ரென்கை
எல்லவருஞ் சம்மதிப்ப தாம்என் றாலும்
    இருதிறமும் சமமேயென் றியம்பொண் ணாதால்
நல்லவுத விகள்உலகுக் கியற்றி டார்சேர்
    நற்கதியும் அற்பமதா நாடிச் செய்வார்
மல்லலுறு சாலோகந் தனிற்சேர்ந் தாலும்
    வகுக்கரிய வண்மையதா வகுக்க லாமே 95

### வைணவரிற் பேதவாதம்

சட்சமய நெறிகளில்ஒவ் வொன்றைத் தொட்டுச்
    சமரசநிச் சயமடைந்தார் சகத்திற் பல்லோர்
பட்சமின்றிச் சங்கரன்போற் பொதுவாய் யாரும்
    பகரவில்லை, வயிணவத்திற் பழையோ ரெல்லாம்
உட்சமயக் குரவர்களுக்(கு) ஒத்தே வாழ்ந்தார்
    ஒருவன்மட்டும் உதவிசெய்வா னெத்துத் தம்மில்
தெட்சணமென்(று) உத்தரமென் றிருகூ றுக்கிச்
    சீரழிந்து பகைவிளையச் செய்திட் டானே 96

### உபாசனையுடையோர் நிறுவியதே உறுதிபெறும்

ஔவையைப்போற் கணபதிக்கா ளாகி னோரும்
    அகத்தியன்போற் குகப்பெருமான் அருள்பெற் றோரும்
கொவ்வையிதழ் வாய்மடவா ரெனினும் யார்க்கும்
    குறுகியவ ராயினும் கோதொன் றெய்தார்
செவ்வைபடுஞ் சித்தியெட்டும் ஆடிப் பின்பு
    திரும்பாத வீட்டிடத்தும் சேர்வார் திண்ணம்
தௌவையுறு முகத்தொருபொய்ச் சமய மேனும்
    தவப்பயனில் லாதவராற் சமைக்கொண் ணாதே 97

### அறுசமயங்கள் தோன்று தோட்டவை

நானிலத்திற் பலவாரும் நூலில் ஒன்றும்
நவிலாத த்ாம்புதிய நாம ரூபம்
ஆனியிலாப் பரம்பொருளுக் கமைத்து நாடி
அருள்பெறினும் சம்மதமே. ஆறு பேதம்
ஏனிகழ்த்தல் என்பீரேல் முன்னோர்க் கவ்வா(று)
இலங்கியதுண்(டு) அவ்வழிதொட் டேறு வார்க்கே
ஊனிகத்து மானிடர்க்கு நஞ்சாம் வண்ணம்
உஞற்றுவோன் உபாசனேயே உயர்ச்சி யாமே 98

### கடவுளின் ஆறு குணமே ஆறு சமயங்கள்

பரம்பொருளின் பிரகாசம் பரிதிப் புத்தேள்
பலவுலகும் ஒடுக்குகின்ற பண்பே யீசன்
கரந்தவற்றை உதவுவது சத்தி, யாவும்
காப்பதுமால், அடியவர்தாம் கருதும் செய்கைக்(கு)
உரங்கொடுத்து முடித்திடுதல் கணேசன், ஞான
உபதேசம் புரிந்திடுதல் ஒள்வேற் கையான்
வரந்தருமட் டுபாசித்துப் பெற்றோ ரிந்த
வகையறிவார் மற்றையர்க்கு வம்பாம் அன்றே 99

### கடவுள் வடிவத்தை உபாசகன் பெறுவதே முடிந்தநிலை

ஐயமின்றித் தெய்வவுருத் தியானிக் கின்றோர்
அதன்வடிவம் ஆவாரென் றறையும் நூல்கள்
பொய்யலவென் றெப்பாதார் தாமும் காணப்
புழுவெடுக்கும் வேட்டுவனும் புரியும் சாட்சி
மெய்யருக்காம் உபாசனேயின் முடிவிம் மட்டே
மேலவர்தாம் நகைப்பதெண்ணி வெட்கு றுமல்
செய்யவந்த நூல்நிமித்தம் ஞான காண்டம்
சிறிதொருவா றமைந்தமட்டிற் செப்புவேனே 100

முற்றிற்று.

தெய்வமே துணே

உ
குருவே துணை

# கௌமார முறைமை நூலின் கருமகாண்டக் குறிப்புரை

### பாயிரம்

1. பருகரும் தமிழ் அளவு கைப்பு – இவற்றில் மிகுதியான கடல் நீரையுண்டு, இனிமையும், விசாலமுமான தமிழைத் தந்தவர் அகத்தியர். இளமையும், எழிலும், மணமுமுடையவன் குமாரன் என்க. தமிழும் அதோடு ஒப்புடையதென்பது குறிப்பு,
2. என் ... ... உதித்தமட்டு, என்றதால், ஒரு நூலின் வழிபற்றி மொழிந்தேனில்லை, திருவருள் விளக்கியபடி சொல்வேன் என்பதாம்
3. உம்பர் - தேவர், புண்ணியப்பயனை நுகர்பவர் அவர். அப்பிறவியி லிருந்தே முத்தியடைதல் ஏலாது, மீண்டும் உலகிற் பிறந்து தவஞ் செய்தே அதைப் பெறற் குரியர்.
4. (1) தாய், தந்தை. (2) குரு, (3) தெய்வம் இம்மூன்று பிரிவைப் போல, கருமம் – பத்தி, ஞானம் என்ற முப்பகுதியும் என்றதாம்.
5. நான்குபூதம். மண், நீர், நெருப்பு, காற்று என்பவை, வெளி என்ற ஆகாயத்தில் அமையும் அதுபோல, எந்தச்சமயங்களும் கௌமார சமயத்துள் அடங்கும்.
6. அருவ வாதிகளும், குருவை ஒப்புவர். குருவும் வேண்டாமென்று, பலரிடம் பேசி ஒருவன் வெற்றிபெறுவானுனல், அவன் குருத்து வமுடையவனேயாம். அவன் பொதுவான பிரம்மத்தின் அருள்பெற்ற, குமாரனுவான் என்பதாம்.
7. செல்வமும், கல்வியும் ஒருசிலர் பெறுவதுண்டு, ஞானச்செல்வம் தேவராதியர்க்கும் அரிது, அதை அடைந்த அடியவர் திருவடித்துகள் பற்றுக்கோடாகிய துணையாகும் என்றவாறு.

### நூல் 1. கருமம்-சரியை கிரியை நூல் வழிபாடு.

1. களியாமை – மகிழாதிருத்தல், கட்குடித்தல் என இரு பொருள் கொள்க. சாதாரணமான பயிர்க்களைபோலின்றி, மக்களைத் தீய

வழியிற்றிருப்பும் தன்மை பற்றிப் பாவமிகுகளேயும், என்று கூறினர் பாய் உடுப்போர்—சமணர்,

2. வேனன்—ஓர் அசுரன். கடன் – கடமை.

3. மகக்கொலே – யாகத்தின் கொலே.

4, ஒன்று – ஒருசமயக்கருத்து. அந்தந்தச் சமயத்தினரும், அதையியற்றியவரைத்தெய்வமாகப் போற்றுவர்.

5. மூர்க்கர் – வடமொழிப்புலமைபெற்ற இராவணன் போன்ருரது இடைச்செருகலே வேதத்திற்கொலேபுலேயைக் கூறும்பகுதி என்பதாம்.

6. கற்பின்வழி - கொள்ளல், கொடுத்தல்களிதல் நெறிபற்றி ஏற்பட்டது சாதிக்கூறுகள். மாதிரம் – உலகம்.

12. கருமபலம் – வினையின்பயன். குருடனுவதும், துறவினேயடைவதும், தீயதும், நன்மையினதுமான முன்விளேப்பயன் என்பதாம்.

14. சடம் – அறிவற்றது (மந்தபக்குவமுடையவன்)

15. தெளிந்தோர் – சமயபேதமற்ற சமரசஞானமுடையோர். பொருள் பரம்பொருள்—ஐவடிவை—அழகிய திருவுருவை. புதல்வன்—குமாரன்.

17, தோட்டுஉருவம் – புறவடிவம். சிலே—மலேமுகடு. குறிச்சி—உலகமே மலேயியல்பினது. குகன் – அன்பரது மனக்குகையில் விளங்கும் கடவுள். கண்டம்—உருவம், அகண்டம், அருவம்.

18. கல்அதனுல் – கற்சிலே வடிவமாக. கல்வடிவமான மலேநிலம், முருகனுக்குரியது. எந்த மூர்த்தியின் உருவமும், கற்சிலேகளால் ஆகியவை. ஆதலால் முருகனுக்குவேறுபட்டதல்ல. (கௌமாரமே)

20. நாய்உணவு – மாமிசம்.

21. அணித்து – நெருங்கிய தொடர்பினது.

22. பச்சரியில் மான் குட்டியின் இரத்தம் கலந்து வழிபடுவது, ஆற்றுப்படையுள் கூறும் வாமகௌமார நெறி, அது சிறந்தநல்ல என்பது அருள்நெறி. நல்விரதம்—கருணேயோடுள்ளமுறை

24. அந்தவாரம் – ஞாயிற்றுக்கிழமை.

25. இடம் – சூரிய வட்டத்துள் அமைத்தல். சூர்மதலே—பானுகோபன். முதல்வீரன், வீரவாகுதேவர்.

26. 12 வீதி - 12 இராசிகள், வயமா—சிங்கராசி, சூரியனது சொந்தவீடு. ஆவணி மாதத்து ஞாயிறுதோறும் வழிபடுதல் சிறப்பு, இன்றேல் முதல் வாரமட்டுமாவது வழிபடுக என்பதாம்.

27. மகரசங்கராந்தி – தை மாதத்து முதல்நாள். சூரியவழிபாட்டுக்குச் சிறந்ததாம். அமாவாசை–சந்திரனும், சூரியனும் ஒன்றுபட்டகாலம் என்பர்.

28. சினை–முட்டை. கயிலைமலையில் வசிப்பு, பார்வதி மலையரசன் மகள், வில்லும் தங்கமலை. உருக்கொண்டது. நெருப்பு மலை. அரசன் மகவாகிப்பாலும் உண்டான். ஆகவே, மலைத்தொடர்புடைய கௌமாரத்தைச் சைவம் சேர்ந்தேயாம் என்க.

31. ஆதிபராசக்தியிடமிருந்தே, ஐந்தொழிற்றவலைவர் தோன்றினர் என்ற வரலாறு. குமாரர்–திருவருவடைந்தோர். கன்னிரவி – புரட்டாசி மாதம்.

34. கவுரவர் – துரியோதனாதியர். கலபம்–மயிலின் இறகு. பார்த்தன்–அருச்சுனன். சரதம்–எல்லாம் யானே என்ற அநுபூதியுண்மை (பகவத்கீதை)

35. புந்தி–புதன். அவன்நாள்–புதன்கிழமை. முடவன்நாள்–சனிக்கிழமை. அந்தியம்–கடைசியானதாயுள்ள அந்நாள் சிறப்பானதல்ல. புதன்திருமாலுக்குரியதென்பதாம்.

36. வல்–சொக்கட்டான் காய். மகன்–வியாச முனிவர். கனகன்–இரணியன்,

36. ஆரல் – கிருத்திகை. கௌமாரர்கட்கு சிவ கருணை முக்கியம் ஆயினும், அதில் உயர்வ தாழ்வுகளுண்டு. வீரத்தையே குறிக்கோளாயுடையவர் ஒருசிலர்.

40 குமாரக்கடவுள், சூரசங்காரத்துக்காகத் தோன்றியவரென்பது ஒரு அவதாரம். முருகன் என்றும் உள்ளே பொருள் என்பது வேத முடிவு, வரலாற்றுள்ளும் காண்க. அநுபவமாக உண்மை காண்பதே உயர்வான கவுமாரம், மகரவிரத கௌமாரர், முருகனைத்தவிர வேறுகடவுளை வணங்காத திரமுடையார் என்ற கருத்தாகும்.

41 கம்பு அம்கை–சங்கைப்புனைந்த அழகியகை. கவிஞன்–சடசோபர் மாலை–மன்மதன்புனைந்த மகிழம்பூ மாலை. மன்மதன் திருமால் குமாரன் சடகோபன் திருமாலருள்பெற்ற குமாரர்] மன்மதன் பந்தம்விளைப்போன், சடகோபர் மந்தத்தைப் போக்கும் ஞான குருபரன் என்ற கருத்து.

44 திருவேடம். திருநீறு–திருமண் குங்குமம். ஆகியவற்றை ஒருங்கு

புனைவது, சமரசஞானமுற்ற கௌமாரப்பண்பு. எவ்விதச் சமயக் குறியுமில்லாதவர். மிருக இனத்தைச் சார்ந்தவரென்பதாம்

45 46. எச்சமயமும் ஒன்றென்ற சமரசஞானம் கைவந்தாலும், ஆதியில் தொடங்கியது, எந்தச்சமயக் கடவுளிடமோ, அந்தபிமானம் முடிவு வரையிருககுமென்ற விவரம் கூறுகின்றார்.

49 உபாசகனுக்கு, கல்வி ஒருதுணை. அதன்படி அனுபவிக்க தியான சிந்தனையில் முயலாமல், கற்றுக்காலம் கழிப்பது வேண்டாம் ஆகவே மானமின்றி என்றார். "கற்றபின் நிற்க அதற்குத்தக" என்பது காண்க.

53 சிலை-கருங்கல்வடிவம். போலிஞானமுடையவர். மூர்த்திவடிவங்கள் செய்தருளிய தெய்விகச்செயல்கள்பல. ஆகவே, அவர்கள் வாய் மொழியில் மயங்கவேண்டாம் என்பதாம்.

56 அங்கசேட்டைகள் யாவையும் உபாசனையுடையோர்க்கு ஆகா வென்பதாம்.

57 பஞ்சதாரை-சருக்கரை விதித்த நிவேதனம்-தூய்மையான உணவுப் பொருளென்க. கையினால் நீர் இறைத்தலாவது, அர்க்கிய பாத்திய ஆசமனம் என்பன. மூர்த்தியின், பாதங்கழுவுதல், கையலம்புதல், பருகுதல், என்றவரிசையில் மூன்றுதரம் நீர் விடுதல், என்றமுறை,

58 கபிலையாதி-கோதானம் ஆதியான. அசுரகருமம்-கொலைப்பூசனை. சத்தியம்-நறுபிக்கையிப் உறுதியும் என்க.

59 தகர்ஆதி-ஆடு முதலிய உயிர்கள். "எஜமான, சர்வாபீஷ்ட, சித்திரஸ்து" என்ற வாக்கியம்.

60 மாறுபட்டு என்றது, பஞ்சாட்சரமாறல், சடாட்சரமாறல், என்று ஒவ்வொரு அக்கரத்தையும், முதலாக்கொண்டுமாறி யந்திரத்தில் அடைத்துப்பூசிக்கும் முறை. இருப்பினும், நேர் முறையே போதும் என்பதாம். சரியை, கிரியையான வழிபாடு ஒன்றுமட்டும் போதாது மனதில் சிந்தனைவேண்டுமென்பதை விளக்க, தந்திரத்தை என்றார்

61 தாவரம், அசைவற்றிருக்கும் சிலைவடிவம் சரமூர்த்தி-உற்சவடிவம். இவற்றில் பொருத்தப்படுவது, யந்திரத்தாபனம்.

61 தொடக்கு-பாசபந்தம் இரண்டும்-பிரணவம்சேர்ந்த, பீசம்-ஓம்ஹாம் என்பதாம்.

70 திக்குப்பாலர் 8 யானைகள் 8. நாகங்கள் 8. இவை-பூமியைத்தாங்கி நிற்பன. அந்தவடிவங்களைப் பூசித்தல். ஆதன பூசை என்பர்.

72 சரியை கிரியையில் முதிர்ந்த ஞானபக்குவமுற்றவர்கள், அவற்றைக் கைக்கொள்ளாதிருக்க நேர்ந்தால் அதை மற்றையோர் மாற்ற முடியாது. ஒரு காரணத்துக்காக-வைராக எண்ணம் கொள் வார்கள் என்றதாம்.

73 வெறும் நாமம் ரூபம்–ஏதோ ஒரு புனை பெயர் ஏதோ ஒரு கோர வடிவம். இவற்றிற்கு ஆடு, கோழி முதலிய கொலைப் பூசை. விரும்பிப்புரிவோர், கீழ்மக்களென்பர் அவர்களினும், வேதவிதி யென்று பழிகூறி, இந்திரன் முதலியோரைக் குறித்துச் செய்யப் பெறும் வேள்வி மூலம் கொலையும், ஊன்நுகர்ச்சியும் செய்வோர் கீழோர் என்ருர்.

77 மாரன் விழா–மகளிர் இன்சம் தேவருலக மாதர் நலம் கருதிச் செய் யப்பெறுவது, யாகம் ஆதலின், அவரது செயலின் அறியாமை கருதி–இதுபோலும் வம்பு ஒன்று இன்று என்ருயிற்று.

78 நிட்காமியம்–இச்சையின்றிச் செய்தல், செய்வது கொலையாகம். இதனுல் முத்தி என்பவரும், மாமிசத்தைச் சத்திக்குப்படைத்து; செவ்வலரிப்பூவாக மாறச்செய்வோம் என்பவரும், கொண்ட கருத்தை பரிகசித்து, வெறுத்துக்கூறுகின்ருர்.

81 நூல்–நாலடியார்.

82 அந்தணன் அரசபதவியேற்பது அவன் தகுதிக்கு உயர்வன்று வாணிபம் விவசாயம் போன்றவையும் ஏற்றதன்றென்பதாம் மாதிரம்–உலகம்.

89 மற்றவற்ருல், கொலை புலை உடைய கோயில்.

90 நல்லோர் தீமை நுகர்வது முன்னைய தீயவினை தீயோர், நலமுடன் இருப்பது முன்னைய நல்வினை இதற்குச்சான்றும் பயனும் விளக்கியதறிக.

97 வாதி–இரசவாதம் செய்வோன்–போலித்தங்கம், ஈயத்தின் சேர்க் கையால் மாறும். ஆகவே, ஈயத்தின்மேல் அவன் வெறுப்புவரும் அதுபோல, யோகியும், வீரனும், ஞானியும், பயனற்ற; பகட்டின ராவர் என்க.

---

உ
குருவே துணை.

# மூன்றாவது

# ஞானகாண்டம்

---

### உண்மை ஞானம் இது எனல்

ஞானமென்ப தளவிறந்த விதமாச் சொல்வார்
நவின்றிடுப அத்தனையும் நம்பொண் ணாது
வானவர்பற் பலருளர்என் றுரைக்கின்றோர்க்கும்
மறையனந்த மென்னுமொழி வம்பென் போர்க்கும்
ஈனமுறு மாயையொன்று பரமல் லாமல்
இருப்பதாப் பிதற்றுநர்க்கும் இரக்க மின்றி
ஊனருந்தும் வேள்வியினை ஒப்பு வோர்க்கும்
ஒருநாளும் உதியாத உண்மை யாகுமே. 1

### போலிஞானத்தின் தீமை.

தேகமொன்று சிவனென்று தெய்வ மொன்று
நிகழுமிவை ஒருமூன்றும் தெளிந்த பின்னர்
ஏகமய மாவிளங்கு மென்னும் ஞானம்
இல்லாதார் தங்கள்உற(வு) எமக்கா காது
சோகமிக வுண்டாக்கும் சந்தே கத்திற்
றோய்விக்கும் குருபதத்திற் றெண்டு செய்து
யோகமுயல் வாராவம்பில் இகழச் செய்யும்
உலவாத பேரின்பம்உதவி டாதே. 2

பந்தத்தும் பொருள்ஒன்றாய்ச் சாதிப் போரும்
பரத்தினிலும் மூன்றுபொருள் பகர்கின் றோரும்
அந்தத்து மெய்ஞானம் அடைந்தோர் அல்ல
அதில்ஒன்றே இதில்மூன்றே அறைய வேண்டும்

வந்தத்தை விடக்கூடா தென்ன வீணே
மனச்சாட்சிக் கன்னியமா வசனிப்பார்கள்
இந்தத்துர்க் குணம்சம யவாதத் தோர்க்காம்
இகலொழிந்த பொதுநாட்டத் தினர்க்கா காதே 3

சிவன்முத்தன் ருனுமொரு மூர்த்தி யாவான்
சித்தியெட்டுஞ் சார்ந்தோர்க்குஞ் சேரச் செய்வான்
ஆவலுற்ற படிவடிவ மெடுக்க வல்லான்
அனைத்துயிருந் தம்மயமே யாமென் ருலும்
பாவகன்ம முடையார்க்கோர் எமனே போல்வான்
பார்மகள்அன் னவன்திருத்தாள் பரிக்க வேண்டும்
தேவரெல்லோர் களும்அவன்சீர் விரும்பி நாளும்
சிந்திப்பார் அவன்பெருமை செப்பொண் ணுதே 4

ஞானமடைந் துள்ளேமென் றிறுமாப் பெய்தி
நரபதியா தியர்க்கருதி நடுங்கும் பெட்பும்
பானல்விழிச் சிறுமியர்பூண் முலைகண் டேங்கும்
பாசமுமற் றனையனவும் பரிப்பார் பல்லோர்
வானவர்கோன் முதலோர்தம் வேட மிட்டு
வார்த்தைகளும் இசைந்தபடி வசனித்தபால்
போனகமுந் தூசும்இரந் தலைவார் தாமும்
புலவனெனுந் திருநாமம் புனைதல் போன்றே 5

வாசித்துக் காணரிதென் றருணை நாதன்
வகுத்ததிருப் புகழுரைத்தும் மதியில் லாதார்
நேசித்து மறையாதி நூல்கள் ஆய்ந்து
நிறைஞானம் உற்றதுபோல் நிகழ்த்தி மாய்வார்
ஆசித்துக் குருபதத்தின் தொண்டு செய்வார்க்(கு)
அடிமையாம் அவ்ரடியார்க் காளா நின்று
பூசித்தைந் தாறெட்டு மூன்ரெுன் றென்னும்
பொறியினத்தொன் றினைமதிப்பார் புத்தி யோரே 6

சருவசம யத்தின ரும் கருதும் தெய்வத்
    தன்மைமுற்றும் குருவடிவந் தானே யென்னும்
பருவமனச் சாட்சியதாய்ப் பெற்றுக் கொண்டு
    பாருலகும் வானுலகொப் பதுதான் என்னும்
ஒருவனுக்கே மெய்ஞான நிலைகை கூடும்
    ஒருகோடி சாத்திரங்கள் உணர்ந்திட் டாலும்
திருவருட்சித் திகள்சிறிது செய்திட் டாலும்
    திரும்பாத மெய்வீட்டிற் சேரார் அன்றே 7

*உலகினுக்(கு)அ நிதம்வத்து என்கின் றோரும்
    உலகமே பரமாம்என் றுரைக்கின் றோரும்
இலகுமுண்மை நிலையறிந்தோர் அல்ல; அன்னோர்க்(கு)
    இகலொழிந்த பரமசுகம் எய்திட டாது
பலபிறப்பிற் றவம்புரிந்த பேர்க்கே உண்டாம்
    பழிப்பறுஞ்சீர் ஔவைகுறட் பாவி னூடும்
அலகிலவாம் ஊழியருச் சிக்கும் பேருக்(கு)
    அறிவுசற்றுண் டாகுமென அறையும் அன்றே 8

சித்தியெட்டுங் கைவரப்பெற் றிந்தி ராதி
    தேவர்களும் நடுங்க எங்கும் திரிகின் றோர்க்கும்
முத்திபரி தானவிதம் வாகி சாதி
    முனிவர்சரித் திரம்விளக்கும்; முந்நீர்ப் பாரிற்
பத்திநிலை யித்தகைத்தென் றறியா தாரும்
    பரஞானம் பெறமுயல்வார்; பாய்கால் மந்தி
உத்தியினும் எய்தரும்ஓர் கனியைச், சேற்றில்
    உழக்கியெழும் பகடுபெற உன்னல் போன்றே 9

சிவமாக்கி எனையாண்டான் அத்தன் என்னத்
    திருவாத வூர்முனிவன் செப்பக் கேட்டும்
உவமான மற்றபரம் பொருளே யான்என்று
    உலகிலுள பலமாந்தர் உரைப்ப தன்றித்

---

* பல்லூழி காலம் பயின்றரனை அர்ச்சித்தால் — நல்லுணர்வு சற்றே தரும்
ஔவை குறள்

தவமார்க்கச் சித்தியையும் பழிப்பார் அந்தோ
தனமுடையார் வலியுடையார் தம்மைக் கண்டும்
அவமானப் படுவார், இக் கொடுமை யெண்ணில்
ஆச்சரியத் தாச்சரியம் ஆகு மன்றே. 10

சீலமலி தருதவத்துக் குமார தேவன்
சித்திபெற்ற முத்திகளிற் சிறப்பே தென்னில்
தூலவுட லொடுகலக்கும் அதுவே யென்னச்
சொல்லிவைத்தான் அம்மொழியே துகளில் மாற்றம்
ஞாலமிசை அனுபவமில் லாமல் வீணே
நவின்றுதிரி கின்றவர்க்கு நஞ்சே போலும்
ஆலநிழற் கீழ்ப்பிழைத்த முனிவ ராதி
அபரோட்ச ஞானிகளுக் கமுத மாமே. 11

சாத்திரங்கள் நாலின்நெறி நான்கும் சொன்ன
சாந்தலிங்க மூர்த்திஅருந் தவத்தி னோர்க் கோர்
நேத்திரம்நேர் அருள்நெறியிற் கொன்று வெந்த
நிணமருந்தும் வேள்விசெய நினைப்போர் மீதும்
ஆத்திரங்கொண் டிகழாமை கொடிதென் றூலும்
அநுபூதி ஞானநிலை யடையத் தக்க
பாத்திரம்மூன் றுலகினும்ஒன்று அரிதென் றோர்ந்து
பகர்ந்தமொழி அறிஞர்மகிழ் பான்மைத் தாமே. 12

தந்த வமே மிக்கதெனச் சாற்று வாரும்
சகமுழுதும் படைத்தளித்துத் தகிக்கும் தெய்வத்(து)
அந்தணரு ளேவலிய வருமென் போரும்
அபக்குவரே, அவ்விரண்டும் ஆமென் பேருரே
செந்தகைய ஞானத்திற் குரியராவார்
சேயிழையும் ஆடவனும் சேர்ந்தா லன்றி
மைந்தனுதி யாமுறைமை அதற்கோர் சாட்சி
மனைவியுயிர் வரன்கணவன் வகுக்குங்காலே. 13

### ஞானம் இவையென்பது.

ஞானமென்னு(ம்) மொழியினுக்குப் பொருளே தென்னில்
நல்லறிவே யெனப்பெரியோர் நண்ணிச் சொல்வார்
கானமறைப் பொருளறிதல் கல்வி ஞானம்
காதிலொன்றைப் புரியாமை கருணை ஞானம்
தேனவிழ்பன் மலர்சொரிதல் பத்தி ஞானம்
சிந்தித்த படியாடல் சித்தி ஞானம்
நானவனென் னுரைக்குமிரு பொருளுந் தோய்ந்து
நடுநிலையில் நிற்பதுமெய் ஞான மாமே 14

தன்அறிவுந் தற்சிவ சாட்சி தானும்
சரிபாதி யென்றெருகாற் ருயு மானுர்
சொன்னதுண்மை யேயெனினும் அந்த வாறு
துணிந்துலகோர் களுமறியச் சொலக்கூ டாது
பன்னகத்தின் படமனைய அல்குன் மானுர்
பளிக்கறையிற் றம்முள்ஒத்துப் பழகல் கண்டும்
அன்னவிதம் உலகறிந்த தெனினும் தாங்கள்
அடிமையெனப் பணிபுரியும் அறமொன் றுண்டே 15

அரசுரிமை யெய்தியதால் உவகை மிஞ்சி
அருந்தவத்தோர் தமைமதியா அநீதி வேந்தும்,
கரவிலின்பம் விழைந்துகெஞ்சி ஊடல் மாற்றும்
கணவனைத்தாழ் வென்றுளத்திற் கருது மாதும்,
விரதமுன்னுள் புரிபலத்தால், பரமல் லாத
வேறலம்யாம் என்றுணரும் வியன்ப ரோட்சம்
வரலுமதைச் சூனியமென் றெண்ணிச் சற்றும்
வணங்காத தவசியும்,பின் மாழ்கு வாரே 16

### உயிரும் உலகமும் இறைவனை முதலாகஉடையது

கடலினிடத்(து) அலைகுமிழி திவலை யாதி
காணுறல்போல் பரத்தினிடம் காணல் இந்தப்
புடவிமுத லர்யபிர பஞ்ச மென்னப்
புகலல்உண்மை யானலும் புணரி போலும்

நிடமிலவால் அவையதன தென்னு மாற்றூல்
செகம்சிவம் பரத்தினதே சிறிதும் அஞ்சா(து)
உடலின்அபி மானியையே முதன்மையென்பார்
உயர்ச்சியுந்தாழ்ச் சியும்அறியார் உய்க லாரே 17

பங்கயன்சொல் லியவேதப் பயன்ஈ தென்னப்
பராசன்மகன் பகாந்துளசூத் திரத்தைப் பல்லோர்
தங்களுக்(கு)ஆ மாறுஉரைகள் செய்து கொண்டார்
சங்கரமா முனியனைத்தும் தானே யென்றான்
அங்கவன்சொற் படியானும் சொல்கின் றேமென்(று)
அலைகின்றார் சிலர்அந்தோ அவன்போல் தாமும்
திங்கள்முடிச் சிவன்உமைமால் முதலோர்ப் போற்றிச்
சித்தியெட்டுஞ் செய்துலகைத் திருத்தி லாரே 18

எவ்வகைய சமயத்துக் குரவர் தாமும்
எள்ளளவா யினும்ஞானம் எய்திச், சித்தால்
தெவ்வரைவென் றியன்றகதி அடைந்தா ரேனும்
சீரியர்என்(று) யாவரையும் செப்பொண்ணாது
பௌவம்நிகர் கலைமுழுதும் பரவுந் தெய்வம்
பரமேயென் றுணர்ந்துவ கொலை பயிலார்க் கெல்லாம்
அவ்வவர்தங் குரவனெனத் துலங்கிப் போகம்
அனைத்துமயின் றிசைவில்முத்தி அடைந்தோர் மேலே. 19

பொறியனைத்தும் ஒடுங்கவொரு குறியில் நின்றுற்
பூதலத்து மானிடர்தாம் புரிதற் காகா
நெறியென்ற சித்திமிக உண்டாம் அப்பால்
நிசமான முத்திபெற நேசித்தாலும்
கிறிதுன்றும் நிரையமெய்த முயன்றிட் டாலும்
கேள்வியில்லை பொருட்குவியல் கிடைக்கப் பெற்றோன்
அறிவின்கண் நின்றறங்கள் செய்திட் டாலும்
அலதுகள்ஊன் கொள்ளினும்ஆம் அந்த வாறே 20

கொல்லாத விரதியராம் சமணர் தம்மைக்
குணப்படுத்நித் தம்மினத்திற் கூட்டி டாமல்
கல்லாற்செய் காணமதில் மரத்தி ஞற்செய்
கழுவிலிடல் கொடுமைஎனக் கழறற்(கு) ஒல்கா
வல்லாண்மை வயிணவனும் சைவன் ருனும்
மற்றவரில் வாதமிடல் மடத்திற் றீயால்
பொல்லாங்கு செய்தல்பிழை யென்கின் ரேனும்
பொதுஞானம் சிலநாளிற் பொருந்து வோரே 21

செவிமுதலாம் ஐம்பொறியும் ஒடுங்கு மாறு
சிந்தையினுற் சாதனைகள் செய்வார் சில்லோர்
கவிபொழியும் சீகாழிப் புலவன் போல்வார்
கழற்றுணைக்காந் தொண்டுசெய்து காப்பார் சில்லோர்
புவியிலிரு திறத்தோரும் ஞானச் செல்வம்
பொருந்துநரே யாஞலும் புரைபோ(டு) ஐயம்
தவிருமுத்தி பின்சொல்லப் படுவார்க் காகும்
தனிஆச்சா புரம்அறிந்த சாட்சி தானே 22

**கண்ணுடைவள்ளல் கருத்துஉயர் நிலையே**

ஒழுவிலொடுக்கப் பெயர்நூற் காரன் சொன்ன
உண்மைஅறி வறிந்தவர்க்காம் உறுதி யேனும்
கழிவருந்திக் காழிநகர்ப் புலவன் கோலம்
கருதியெதிர் கண்டவிதம் கழற வில்லை
வழிபடற்காம் சரிதாகி மார்க்க மூன்றும்
வம்பெனல்போல் இகழ்ந்த துண்டு வஞ்சம் இன்றேல்
விழியருவி சொரிந்(து) இலிங்கம் ஆற்றிளீரில்
மிதந்துவரக் கண்டுமகிழ் விதம் என் னமே. 23

**திருச்சிற்றம்பலநாடிகள்திறம்**

சித்தியொடு முத்தியினும் சேர்க்கத் தக்க
தேசிகனுக் காளாகும் செல்வம் பெற்றோர்
புத்தியினல் வேறுதெய்வம் நினைக்க வேண்டாம்
புகல்வனமுற் றவன்வடிவே பொய்அன் றுண்மை
நத்தியவர் எண்ணெண்மர்க் கொருவன் முத்தி
நல்கியவா(று) உலகுரைக்கும் நடரா யன்பாற்
பத்திசெய்யச் சென்றேனும் மீண்டாங் குற்ற
பண்பறிவார்க் கிந்தமொழி பகையா காதே 24

குருபதமே கதியென்னச் சொல்லு மாற்றம்
குவலயமும் தோன்றுதொட்டுக் கூறல் உண்டு
பருவமில்லார்க் கிந்தமொழி கசப்பே யாகும்
பரம்அருவே யென்றுணர்வார் பலவா ருப
உருவமும்அ தன்ருயில் வேறென் றுண்டென்(று)
உளமலையார், அவர்கள்மட்டில் உடம்பி னேடு
பெருகொளியிற் கலக்குமுத்தி யதுவும் பொய்பாம்
பெறுமாறென் றுணராமற் பிதற்று வாரே 25

பாமரர்க்கும் பண்டிதர்க்கும் மனத்தால் நாடிப்
பரவியவா றெதிர்தோற்றும் பரம்ஓ ராசான்
தாமடையுங் கதிஅடுத்தோர் தமக்கும் நல்கும்
சத்தியசங் கற்பமுடைத் தவன்ஓ ராசான்
ஆமவற்றென் றறிக்கினன்றி ஞான மெய்தாதா(து)
அவ்வழிவிட் டுக்கரணம் ஆதி கூறி
ஈமமதற்(கு) உடல்போகும், முத்தி வீட்டுக்(கு)
ஏகும்உயிர் ஏனும்நூல்கட் கிசையொண் ணுதே 26

உருவபர நாட்டத்தோன் எனினும் எங்கும்
உற்றததுவேயெனநன் குணர்வான் ஆகில்
பொருவில்பர ஞானத்தின் முதற்பா தந்தோய்
புண்ணியனும், புராணங்கள் புகல்ப வாய

திருவளர்பன் மூர்த்தியையும் வெவ்வே றுகச்
சிந்திப்போன் அகண்டபரம் செப்பி னலும்
கெருவமுறு சித்திசில செய்திட் டாலும்
கிரியையினிற் கிரியையெனும் கிளர்ச்சி யோனே 27

சரியைகிரி யாயோகம் ஞானம், ஒன்று
தாண்டியொன்று தோன்றுமெனச் சாற்றுவார்கள்
எரியுறுகுங் கிலியமதாற் பணிசெய் தான்றன்
எழிற்சரிதை சிலர்ஞானத் தேற்ற மாமால்
பெரியவன்தொட் டிடிற்சிறிதும் பெரிதே யாகும்
பேதைதொடிற் பெரிது(ம்) மிகு பிழையாங் கண்டீர்
உரியபரம் பொருள்அருவும் உருவு மாகும்
ஒருடல்வே றெடுப்பவர்தம் உணர்வும் பொய்யே. 28

உத்தமச்சற் குருஆவான் தான்வாய்ந் துள்ள
ஒருநிலையைப் புகழ்ந்துமற்றும் உள்ள மார்க்கம்
அத்தனையும் பிழையாமென் றிகழ மாட்டான்
அடுத்தவர்தம் பக்குவங்கள் அறிந்திட் டன்னேன்
தத்தமக்குத் தக்கவண்ணம் உபதே சித்துத்
தன்னிலைக்கு வருமளவும் தழுவி ஆள்வான்
சித்தமுயல் வழிகிடக்க வேறு ஞாயம்
தெரிவித்தால் ஒருக்காலும் சிர்ப டாதே 29

தானும்ஒரு மூர்த்தியென்றுள் அறிவிற் றேன்றும்
தயிரியங்கண் டப்பொழுதே சகள நாட்டம்
ஏன்உளவா(று) அதுபோதும் என்னுந் தெம்புற்
றிடுவாரும் சிற்சிலருண் டியல்பன் றுண்மை.
வானுருவிற் றம்உருவம் கரையச் செய்யும்
வலியடையு மட்(டு)ம்முயல் வதுநன் றாகும்
கோனுலகை ஆள்வதுபோல் அவனுள் அச்சம்
கொளவிளங்காத் தவர்பலரும் குருடர் தாமே 30

கோசிகன்முன் அரசனொரு வனைக்கைக் கொண்டு
　　குலவுசொர்க்கம் ஒன்றமைத்துக் கொடுத்த பின்னும்
ஆசில்பிர மத்துவம்சித் திக்க மாட்டா(து)
　　அலமந்தான்; ஆனபின்னும் ஆனல்ஆ மென்(று)
ஏசில்வசிட் டன்பகர்ந்தான் என்னு மாற்றம்
　　இகதலமும் சொல்லும்இவை யாவும் கேட்டும்
மாசில்பரம் பொருளே"யாம்" என்னச் சில்லோர்
　　வாய்பிதற்றி நாட்கழித்து மடிகின் றுரே 31

தன்னருகில் உளதொருசிற் றுயிராங் குன்னும்
　　சங்கற்பம் அறிவதற்கும் சத்தி யில்லார்
பன்னரிய பலவுலகும் உணரும் தெய்வப்
　　பழம்பொருள்யாம் எனநினையும் பாவம் எண்ணில்
கன்னல்வில்லி சேனைகண்டு கலங்கு வாரும்
　　காசினியோர் களும்இகழக் கடைப்பட் டாரும்
புன்னரகே யுதவுகொடும் புலையு ற்றுரும்
　　புண்ணியரே யெனத்துணிந்து புகல லாமே 32

ஐயமரு வாதுமற்றோர் அகத்தில் உள்ள(து)
　　அறிவானும் தெய்வமல்ல, அனையான் என்ன
மையலறப் பெருந்தெய்வப் புலமை வாய்ந்த
　　வள்ளுவனர் தமிழ்வேதம் வகுத்தும் அந்தோ
பொய்யனந்தம் புலையனந்தம் உடையார் தாமும்
　　பொருவில்பரம் என்றுதம்மைப் புகல்கின் றார்கள்
வையமுற்றுஞ் சென்றுவென்று மீண்டா ரேனும்
　　மனிதர்மட்டில் என்றேனும் வைக்க லாமே 33

மாநிலத்தில் அளவிறந்த பலவா றுய
　　மதங்கள்உள அவைதோறும் மனிதர் கூடி
மேனிலையீ தென்றுரைக்கும் வழக்கம் உண்டு
　　மெய்ப்பிரமம் அலது பொருள் வேறின்றென்கை

ஆனியிலா நிலையெனலும் அவற்றா டொன்றே
ஆண்குறியின் தோல்களையும் அதுவும் ஒன்றே
சேல்நிகர்கண் மடநல்லா ளெனினும் வேண்டும்
சித்திசெய்யும் வலியடைந்தாற்றெய் வந்தானே 34

தவசியென்றும் பத்தன்என்றும் ஞானி யென்றும்
சாற்றுகின்ற மூவரில்எத் தகவோ ரேனும்
புவனிமுற்றும் போற்றிசைக்கத் தகும்சித் தார்வம்
பொருந்தியே முத்தியினிற் போக வேண்டும்
எவரெனினும் சித்திநலம் எனக்கேட் டாலும்
இகழ்வாரேல் நீரிடைபாம் பென்னத் தோன்றும்
நவமுறுமீ னினம்ஆலம் உமிழும் பேழ்வாய்
நாகரினந் தனையிகழும் நவைக்கொப் பாமே 35

எள்ளளவில் எட்டிலொரு பங்கா னலும்
இரக்கமின்றிக் கொன்றருந்தும் ஈனர்தாகும்
கள்ளநெறி முயல்கொடுங்கோல் மன்ஆ வாரும்
கதியறியா மதத்தினரும் களிக்கும் காலம்
புள்ளகல்வாய் கிழித்தானைப் போலும் சித்தர்
பூதலத்திற் றோன்றூர்கள் பொய்மை ஞானம்
விள்ளவல்லார் பலர்கூடித் தோற்றம் யாவும்
வெறுமாயை எனக்குதிக்கை மிருக்கும் அன்றே 36

காலமிக வலியதெனப் பகர்வார் பல்லோர்
கதிரவனுக் கப்புறத்திற் காலம் இல்லை
ஞாலமிசை உள்ளனவாம் சமய மெல்லாம்
நவிலுமதன் உள்ளடங்கல் ஞாய மேனும்
மூலபரம் ஒன்றேயென் றுணர்ந்த மேலோர்
முன்னிடில்வென் றிடக்கூடும். முந்நாள் அங்கோர்
வேலனைய கண்ணுளும் பசுமா ஓரேழ்
விளங்(கு) இரதம் தடைபடச்சொல் விளம்பி னளே 37

சலசம லரவன்புதல்வர் நால்வர் தம்மில்
சனற்குமரன் ஆலநிழற் றம்பி ரான்பால்
மலநிகளம் தறிபடுமெய் ஞானம் பெற்ற
வண்மையெண்ணி இறுமாந்து மாயன் றன்னைக்
குலமுறைமை தானுமறந் திகழ்ந்த வாற்றல்
குழவியுருப் பெற்றவிதங் குறித்து நாளும்
இலகுறுமே லவர்க்கடங்கிப் பணிகு வார்க்கே
இகழ்வரிய பெரும்பேறுண் டென்ன லாமே 38

வேதமொழிந் துள்ளோனும் பிரணவத்தின்
வியன்பொருள்ஓர்ந் திலனுகி வேள்கைக் குட்டால்
போதவருந் தியவாறும், அதனு லீசன்
புத்திரனைக் குரவனெனப் போற்று மாறும்,
சாதலற்ற வியாதமுனி நூல்க ளன்றிச்
சகத்தோரும் எந்நாளும் சாற்றக் கேட்டும்
பேதமையாற் பலர்ஞானம் உற்றே மென்னப்
பெரிதிறுமாந் தலைந்துதவம் பிழைக்கின் றரே 39

சற்குரவன் கடைக்கணருள் பெறவே நாடித்
தவம்புரிய மாட்டாமல் சாத்தி ரங்கள்
கற்குமவர் ஒருநாளும் ஞான மெய்தார்
கல்விவம் பன்(று) அதன்பயனைக் கழறு கின்றேன்
புற்குடம்பை அனையவுடல் அநித்த மென்றும்
போதபர மானந்தம் பொருந்தத் தக்க
நற்குணஞ்சேர் குருபதமே சத்யா மென்றும்
நன்கறியத் தகும்உணர்வை நல்கும் அன்றே 40

பரம்,சகள மாகுவதுண்டென் றெருப்பி னுலும்
பாராதி யுள்ளனவாய்ப் பகர்ந்திட் டாலும்
நிரஞ்சனநிட் களத்தன்மைக் கிழிவா மென்று
நிகழ்த்துவார் அவர்க்குரிய நீர்மை யெண்ணில்

சரம்சன்னி திர்கைநண்ணி அதற்குத் தக்க
　　தூயமருந் தொன்றுதுய்த்தோன் சொந்த வாயாற்
*கரம்சருவி டாதுபுளி யென்றிட் டாலும்
　　சனநோய்தீ ராதெனும்பொய்க் கதைக்கொப் பாமே. 41

எல்லையிலா மங்கையர்தம் இன்பம் துய்த்திட்(டு)
　　எழிற்பிரம சாரியெனும் இசைபெற் றேனும்
தில்லையின்கோ புரத்தேறி வீழ்ந்தோன் றன்னைத்
　　திருவாரூர் இருந்தளித்த சீரி யோனும்
கொல்லையிற்பாற் பசுவதனைப் பிடித்த வேங்கை
　　கொண்டுவந்து விடுமாறு கூறி னேனும்
கல்லைநிகர் மனத்தார்க்கும் தோன்றும் ஞானக்
　　காரர்எனச் சொலுமொழியைக் கழிக்கொண் ணாதே 42

இந்திரிய போகமொன்றுந் துய்த்தி டாதார்க்(கு)
　　இயம்பியறி விப்பதரி தென்ப துண்மை
தந்திரமும் மந்திரமும் பொறியும் நெஞ்சும்
　　தாண்டியப்பால் உறும்ஞானந் தன்னைச் சொல்லால்
வந்திடச்செய் திடலாமென் றுழைப்பார் அந்தோ
　　வத்து,தந்தி ரத்ததென்னும் வாய்பா டுண்டு
முந்தியமா தவப்பயன்வந் தெதிர்ந்தா லன்றி
　　முனிவர்சித்தர் ஆதியர்க்கும் முற்று றாதே 43

காரியமும் காரணமும் கடந்த ஞானம்
　　கருதும்உபா சனைப்பலத்தாற் கைவந் தப்பாற்
சீரியவத் தல்லதொரு பொருளில் லாமை
　　திகழ்ந்ததுவே தானகத் தேறி நின்றும்
பாரிலுள்ள தொண்டர்திரு வடியிற் றேய்ந்த
　　பசுந்துகளைச் சந்ததமும் பரவு மேலோர்
வீரியமே சரியாகும், மற்றுள் ளார்தம்
　　விருப்பனைத்தும் கருதில்முற்றும் வீணும் அன்றே 44

* கரம்சருவி டாதுபுளி – புளியைக் கையால் தொடாமல் வாயால் புளி என்று சொன்னாலும் என்பதாம்.

தூயமறை யாதியநூற் றெகுதி யெல்லாத்
 தோற்றமுமெய்ப் பிரமமெனச் சொல்லு மன்றித்
தீயனவும் நல்லனவும் பகுத்தி டாமல்
 செருக்கடைந்து வாயளவிற் செப்பு கின்ற
மாயமனத் தோரைமட்டும் சொல்லி டா(து)அம்
 மாற்றம்உண்மை யாமாகில் வங்கு வாய்ந்த
நாயதன்புன் மலத்திலுறும் கிருமி தானும்
 நவிலும்அதென்(று) ஏன்அவர்தாம் நாணி லாரே. 45

எவ்வகைய உயிர்தொகையும் தானே யாகி
 இலங்கும்ஒரு பரமெனல்மெய் யானும் கண்டேன்
அவ்வகைமட் டுணர்ந்ததனிற் றிருத்தி யில்லை
 அருட்சீர்உற்(று) இந்திரனூர் அதற்கும் போய்மீண்(டு)
இவ்வகிலத் தினர்க்கான நலமெல் லாம்செய்(து)
 இனிப்பிறவா முத்தியெய்தற் கிச்சித் தெய்த்தேன்
பௌவநடுக் கிடந்(து) அதையே கரையென் றெண்ணும்
 பண்புடையார் சிலர்நகைத்துப் பழிக்கின் றாரே 47

எத்தனையோ மாதவத்தோர் முத்தி சேர்ந்தார்
 எனப்பலநூல் விளக்கலன்றி இசைத்தும் உள்ளார்
அத்தனைபேர் களில்எவரா னாலும் முன்என்
 ஆன்மாஇப் படியிருந்த(து) அறிமின் என்ன
இத்தரையோர் நன்கறியச் சொல்ல வில்லை
 இவ்விதத்தாற் பிறப்பிலையென் றிசைக்க வேண்டாம்
வித்தகமெய் ஞானிகளை யன்றி மற்றோர்
 விரும்பியவா(று) உடலெடுக்கை மெய்மை யாமே 47

தீர்த்தனெறிற் சடைமுடியிற் சிலையால் மோதிச்
 சிவலிங்கத் தினுந்தழும்பு சேரச் செய்த
பார்த்தனும்கண் ணப்பனெனப் பிறந்தா னுகிற்
 பத்திநெறி யினிற்சிறிதும் பழக்கம் இன்றித்

தூர்த்தகுண முழுமையையும் தணந்தி டாமல்
தூயபர மானந்தம் தோய்ந்திட டோர்போல்
வார்த்தைமட்டில் பேசுநர்க்குக் கதியும் உண்டோ
மானிடராய்ப் பிறக்கில்அதோர் மகத்தாம் பேறே 48

மெய்ப்பிரம நிலையுணர்ந்து மதுரச் செஞ்சொல்
வியன்றமிழாற் றுதிக்கவல்ல மேலோர் தாமும்
இப்பிறவி தப்பிவிட்டால் இனிமேற் சென்மம்
ஏதுவரு மோஎனமிக் கேங்கு கின்றூர்
பொய்ப்பிரமை நீங்காமல் உலக வாழ்விற்
புகுந்துழன்று பரதவிக்கும் புல்லர் பல்லோர்
அப்புவிடத்(து) உப்புருவம் கரைந்தாற் போலும்
அரியமுத்தி சேர்வோமென் றறைகின் றூரே 49

அருள்நலம்பெற் றுயநினைத்(து)ஓர் சகள மூர்த்தத்(து)
அகம்நிலைத்துச் சமரசவாழ் வடைந்து மாறுக்
கருணைவடி வாத்திகழும் பெரியோர் தங்கள்
கருத்தறிந்த அநுபூதிக் காட்சி யெல்லாம்
பருவமுளார்க்(கு) உரைக்கில்இன்பம் பயக்கும் அன்றிப்
பரமார்த்தம் செவிகேட்கப் பகர்ந்தால், அந்தோ
இருவிழியும் இல்லாற்குக் கொக்கின் கோலம்
இயம்பியதோர் கதையினிலும் ஏற்ற மாமே 50

காமநூல் சொல்கின்றேன் இருவர் கூடும்
கலவிவினை தங்களெல்லாம் கழறி னாலும்
ஆமவர்தம் மனமறிந்த சுகத்தைச் சொல்லான்
அதுபோல, ஞானநூல் அறைகின் றேனும்
நேமவழி பாடுநிலை மட்டும் சொல்வான்
நிசமான பரத்தினிடை நெஞ்சம் மாய்ந்து
போமதனை எந்தவிதம் புகல்வான்? அந்தோ
புகன்றிட்டால் அதுவிளைந்த பொய்யாம் அன்றே 51

ஞானிகட்கு விதிநிடே தங்கள் இல்லை
நயந்தபடி செய்திடலே ஞாயம் என்று
நானிலத்து மானிடரும் சொல்லக் கேட்டு
நாவளவிற் கற்றோரும் நடக்கொண் ணுது
மானிகர்கண் ணுர்பலர்சுற் பழித்த தன்றி
மாமியையும் புணர்ந்துநெடு மாலும் ஆனேன்
தானிகழ்த்தும் சத்தியம்பொய்த் தொழியா(து) அங்கோர்
தனையன்உயிர் பிழைத்ததெண்ணிச் சார்கை நன்றே 52

மூர்த்திஉரு வாய்ச்சிலநாள் விளங்கி அப்பால்
முடிந்தபரம் பொருளாகும் முத்தர் தங்கள்
கீர்த்தியொன்றே நிசமாகும்; துவக்கும் போதே
கிளர்பரமநா னென்றுரைப்போர் கீழ்மை யோரே
பூர்த்திஅதே யாதலினல், ஆமாம் என்னப்
புகல்வாருண்(டு) அன்னவர்ஓர் புருடன் திண்தோள்
சேர்த்தியில்லாக் கன்னிகருப் பமும்தோ யா(து)ஓர்
சேய்தந்தாள் என்றுரைக்கும் சிலர்ஒப் போரே 53

அகண்டபர சச்சிதா னந்தம் அன்றி
அறைகின்ற மூர்த்தியெல்லாம் அன்பின் பெட்பால்
திகழ்ந்தசித்தி முத்திபெற்ற பெரியோர் என்னத்
தெளியாதார் ஞானமெல்லம் திருட்டே யாகும்
பகர்ந்தபொருள் உபாசிப்போர் மனதிற் கூடிப்
படிவமாத் தோற்றுகின்ற பண்பும் உண்டு
சகந்தனில்வாழ் வேந்தரெனப் புவனந் தோறும்
தங்குகின்ரு ரென்கைபெறும் தவரு மன்றே 54

யான்பரமென் றேதியிறு மாக்கின் றேன்பால்
எத்தகைய சமயந்தோ ரேனும் தங்கள்
வான்பரம்ஒன் றுள்ளதென்றல் உடனே அந்த
வடிவமெடுத் தன்னவரை வணக்க வேண்டும்

தான்பரிந்தும் ஒவ்வானேற் றண்டித் தேனும்
தன்வசமாச் செயல்வேண்டும் தவப்பே றின்றி
ஊன்பருந்து போல்விழிப்பா னுகில், தேங்காய்
ஒருங்குண்டோன் களாக்காய்கண்(டு) ஒல்க லாமே 55

அவதார புருடனெப் பலபேர் சொல்ல
அகிலத்தில் வாழ்கின்றேன் ஆரா னலும்
தவமார்க்கந் தொட்டுரைக்கும் மூர்த்தி தன்னைச்
சார்ந்துமுன்னைப் பிறப்பில்உய்ந்தோன் சரதம் சொன்னேன்
எவராலும் அளப்பரிய பரமல் லாமல்
இயம்புதற்கு வேறுதெய்வம் இல்லை, ஈனப்
பவநோய்தீர்த் திடும்அலது; தான்கொள் ளாது
பகர்ந்தவரை வழிபடலாற் பாவ மின்றே 56

கண்ணனெனும் பெயர்புனைந்து நந்த கோபன்
கடைத்தலையில் விளையாடும் கருணைச் சித்தன்
விண்ணவர்பூ மாரிபெய்யக் குதிரை வேள்வி
விளைத்திடுமன் னவன் சபையில் விண்டு வானுன்
பண்ணமைந்த நாரதனைக் குமரி யாக்கிப்
பரிந்தணைதற் காம்எயினப் படிவம் கொண்டான்
எண்ணருமிவ் வாறனந்தம் செயலும் ஞானத்
தினுக்கடுத்த யோகத்தின் இயல்பு தானே 57

தங்கடவுள் உலகில்வந்து பிறப்பான் என்கை
சைவர்முத லோர்சிலர்க்குச் சரிப் படாது
செங்கமலக் கண்ணனது சமயத் தோரே
செப்பும்அச்சொற் காரர்கட்குள் சிறந்தோ ராவார்
அங்கவரில் அதனை ஒப்பார் ஏக தேசம்
அவர்மகிமை மற்றையர்கள் அறிய மாட்டார்
இங்கறையும் ஞாயமெல்லாம தெரியவல்லார்
இறைஒருவன் என்பவரே என்ன லாமே 58

அறுசமயத் துள்ளவர்கள் பகரும் நூலும்
ஆமென்றும் அல்லவென்றும் அமையும் உண்மை
பெறுமவரே ஞானியெனச் சொல்ல லாகும்
பேசும்அவற் றொன்றைஒப்பிப் பிறிதை ஒவ்வார்
உறுதிகொண்டு சித்திமுற்றும் எய்தி னலும்
ஒருவீட்டிற் புகுந்தாலும் ஒவ்வாப் பண்டே
மறுவில்புகழ்ச் சங்கரன்தத் துவரா யப்பேர்
மாதவஞு டியர்வழக்கு மாண்ப தாமே 59

வஞ்சமற்ற மெய்ஞ்ஞானம் கைவந் தாற்போல்
மகிழ்ந்திருமாந் துள்ளபல மாந்தர் தாமும்
மஞ்சடர்சந் தனச்சோலைப் பொதியைக் குன்றின்
மாதவஞு டியரைஎங்ன் மதித்துள் ளாரோ
கொஞ்சர்என இகழ்ந்தால்தம் உவகைக்(கு) ஒன்றும்
குறைவில்லை, சமமாகக் குறித்திட் டாலும்
தஞ்சபைக்(கு) அன்னோர்வரலை, அவர்ஓ லக்கம்
தனிற்போய்மீள் கையை, நினைத்துத் தயங்க லாமே 60

மெய்ப்பரத்துட் புக்கவரைப் பலநாட் சென்று
வேறொருவர் உபாசித்தால் விளங்கு வார்கள்
செப்பவரே யெனப்பல்லோர் சொல்வார், அன்னோர்
திருவுருவாய் அதுவரலாத் தெளிவார் சில்லோர்
எப்படியா யினும் நலமே அதனல் முன்னோர்
யாவரையும் நித்தியரென் றியம்ப லாம்ஆல்
கைப்பரும்நீர்க் கால்சமைப்ப விரும்பிப் போற்றும்
கன்னடியன் அகத்தியனைக் கண்டான் அன்றே 61

**வரலாறுகள் உடம்பும். தெய்வ இயல்பு உயிரும் போல்வது**

வேதவியா சன்பகர்ந்த புராண முன்னு
மேதினியிற் சரித்திரநூல் மிகவுண்(டு) ஆனல்
ஓதல்முற்றும் பொய்யென்பார் நரகிற் றுழ்வார்
ஒருங்குநிசம் எனக்கொள்வோர் உழன்று மாய்வார்

ஆதகன்ற நூலத்தைச் சூக்க மத்தை
அனைவோர்க்கும் தோன்றும் வண்ணம் அமைத்த தாகும்
பேதமற்ற பெரியோர் சொல் வழியிற் றேறிப்
பிறப்பறுக்க முயன்றருளைப் பெறுதல் நன்றே 62

**முடிந்த நிலை ஒருவடிவ நாட்டமே போல்வது.**

அலகிலவா கியசமய விகற்ப நூலும்
ஆராய்ந்து சந்தேகித் தழுங்க வேண்டாம்
இலகுமவற் றுள்ளபயன் போகம் மோட்சம்
எனும்இரண்டே அவையிரண்டும் இனிது தோற்றும்
நலமுரைக்கிற் குருபாதத் துணையே யாகும்
சத்தியம்சத் தியம் பிறிதோர் சார்புமில்லை
பலபிறவி யெடுத்துழலும் வினையிற் றேய்ந்து
பரதவிப்போர்க் (கு)இந்தமொழி பயன்ப டாதே 63

ஏகபர தத்துவமாம் தெய்வத் தின்பால்
இயைதருவல் லபமாகி இலங்கும் சத்தி
போகம்முத்தி யென்னும்இரு கொங்கை யோடு
பொலிகின்றாள் அவ்விரண்டும் புசிக்க நாடும்
நாகமுடை யவரேமெய்த் தவத்தோ ராவார்
தக்கவண்ணம் பெற்றுமகிழ் தகையோ ரெல்லாம்
தேகமொடு வாழ்ந்தாலும் வான நாட்டிற்
சேர்ந்தாலும் "குமாரர்" எனத் திகழ்வார் அன்றே 64

சித்திமட்டும் பெற்றோரும், முத்தி யொன்றே
சேர்ந்தோரும், அவ்விரண்டும் திகழ வாய்ந்த
புத்தியினர் தாமும்உண் டென் றுரைப்பார் பல்லோர்.
புகலுமவை மெய்யாகிற் போர்வேல் மைக்கண்
அத்திநிகர் மடவார்பற் பலர், தாம் ஈன்ற
அருமை சேய்க் கொருமுலைப்பால் அருத்தி ஒன்றில்
வைத்திருக்கும் பாலமுதம் புரப்பார் என்னும்
வார்த்தையும்இம் மாநிலத்தில் வழங்கும் அன்றே 65

சுருதிமுடி வாகியஅத் துவித ஞானம்
துலங்கும்வண்ணம் பாரதியைத் தொடர்ந்து வென்ற
பெருமுனிவன் சித்திமிகச் செய்தான் என்கை
பிறங்குறுமிவ் வுலகில்அவன் பேசு மாற்றில்
வருமவர்கள் போன்ற சிலர் அதுவீ தென்ன
வரைந்தவற்றைத் தெரிந்தசில மனிதர் அந்தோ
குருவருளை மறந்துவம்பிற் கூடட மிட்டுக்
கொக்கரித்து யாம் பிரமமெனக் குதிக்கின் றாரே 66

தடையறுமெய்ச் சித்திபெற்றே முத்தி சேர்கை
தருமமெனத் தவம்புரியும் தன்மை யோருக்(கு)
இடையில்இறு மாப்புவந்து கெடுக்க மாட்டா(து)
ஏன்றமட்டில் அநுபூதி எய்தி னலும்
விடையுகைத்தோன் ஆதியர்போல் விளங்கு மாண்பே
விழைந்திடைவார், ஏனையர்தாம் வெறுமை யோரில்
கடைபடும்நா ளினுந்தமையே மதித்தே மாந்து
கரும்பகடூர் சமன்வலையிற் கட்டுண் பாரே 67

மிக்கதுற வினாதியர்(து) அருணைக் கோயில்
விலைமகளைப் பிடித்திழுத்த மேலோன் அந்நாள்
மைக்கழுவிற் றீமூட்ட லாதிச் சித்தி
வாய்ந்தமையாற் சிவலிங்க வடிவ மானன்
மைக்கருங்கண் அரசிவலி தணைய வேட்டும்
மனம்உருகா(து) ஓடினன், அவ் வலியில் பண்பால்
திக்கனைத்தும் அறியஉயி ரொடுசெந் தீயில்
தேகம்எரி தரமாய்ந்தான் தெரிந்துய் வீரே 68

அண்டங்க ளத்தனையும் படைத்த பெம்மான்
அடிமையெனப் பலர்போற்றும் ஆண்மைச் சித்தி
மண்டலத்தில் இழிவாமென் றிகழ்ந்து முத்தி
வாழ்வடைவேம் எனக்களிக்கும் மாந்தர் தன்மை

புண்டரிகக் கண்ணனன்நிகர் மன்னர் மன்னன்
புணர்ச்சி மட்டும்விழைந்து ஒருநற் பூவை தன்னைக்
கண்டவர்கள் இவன்மனைவி யென்னப் போற்றிக்
கரங்குவித்தல் பழு(து)எனல்போற் கருத லாமே 69

செயற்கரிய செய்வாரே பெரியர் என்னச்
சீரியவள் ளுவன்தரும்நூல் செப்பக் கேட்டும்
கயற்கண்மட மங்கைஒரு பானை தன்னிற்
கனியிரண்டு பெற்றமையும் கருதா ராகி
இயற்புலவர் பலர்சரிதங் களையும் பொய்யென்(று)
இகழ்ந்துபரோட் சத்தினையே எதிரா நம்பி
மயற்கடலிற் குளிப்பவரைப் பழிக்க, வேதன்
வாய்ஒருநா ருயிரங்கள் வகுத்தி லானே 70

பஞ்சவிட யங்களுமே ஞானத் துக்குப்
பகையென்பார், அதுகிடக்கப், பருப்ப தம்போல்
மிஞ்சஅநு பவிப்பதற்கும் ஞான மின்றி
விளங்கா(து)இம் மாற்றம்முழு விகற்பம் போலும்
கஞ்சன்உயி ருண்டவன்றன் அளவில் மேனி
காட்டிமனை தொறும்அயின்ற காமப் பேறும்
எஞ்சல்அற்ற ஆயரிட்ட அமுதெல் லாம்உண்(டு)
ஏப்பமிட்ட வாறும்மற்றோர் இயற்றெண் ணதே 71

ஆடகம்பெண் மண்எனப்பல் பெரியோர் தாமும்
அருமறைஆதியநூ லும்அறைபவாம் மூன்(று)
ஏடணைகள் பொல்லாஎன் றஞ்ச வேண்டாம்
ஏமகிரி யெனப்பொன்செய் இறுமாப் பெய்தி,
*மூடரும்கண் மடவாரும் வந்து வந்து
மோகிக்கும் விஞ்சைகற்று, முந்நீர் சூழும்
நாடனைத்தும் கொள்வானும் வணங்க வாழும்
ஞானியைக்கண் டாற்பெரிதும் நடுங்கும் அன்றே 72

* மூடரும்கண் மூட அரும் - இமையாத கண்கள். தேவமாதர்கள் என்பதாம்

எச்சமயத் தேவர்களுந் தானே யாகும்
இயல்புணர்ந்தும் இகபரமாம் இரண்டி னூடும்
பொச்சமுறு மெய்க்கீர்த்தி நிறுவ வேண்டிப்
புலருகின்ற ஞானமுள்ளான் புந்தித் தன்மை
அசமொன்றும் மருவாமல் கண்ட மாகி
ஆகமவே தத்தின்அப்பால் அவிரு மென்னும்
நிச்சயம்நன் குணர்வார்பொற் பதந்தோய்ந் துள்ள
நிலத்துகள்என் றலையைவிட்டு நீங்கி டாதே 73

ஈசனடி யவர்மனத்துள் ஒடுங்கி னன்என்(று)
இயற்றமிழ்ப்பா வலக்கிழவி யிசைத்த தன்றி
நேசமுற்றுப் பலசமயத் தினரும் சொன்னர்
நிசமான ஞானம்இதே நெறிவே றில்லை
மொசம்வரு மென்றுசற்றும் மலைய வேண்டாம்
முப்பொழுதும் அவர்பணியில் முயன்று போற்றில்
பாசவினைக் கயிற்றினது பந்தம் நீக்கிப்
பழிக்கரிய முத்தியின்பம் பயக்கும் அன்றே 74

**குமாரத்தன்மையின் தோற்றுவாய்.**

தாசநெறி யாதியவாம் நான்கு மார்க்கம்
தவத்தோர்க்குண் டெனப்பலநூல் சாற்றி னுலும்
ஈசனுக்கெல் லாவுயிரும் தாச மார்க்கத்(து)
இயைந்தனவே, அவற்றினுக்குள் இணையில் லாத
நேசஅருட் சத்தியொடு கூடி ஆண்டு
நிசஞானந் தரப்பெற்று நிகழும் பாகம்
பேசரிய புகழுடைக்கு மார ராம்அப்
பிராணிகளின் குணம்நான்கு பிரிவு மாமே 75

**நால்வகை மார்க்கங்களின் விவரம்.**

அருளடைந்தும் பிறரேயொத்(து) அவிர்வோன் தாசன்,
அறநெறிகாத்(து) ஏனையவை யழிக்க வல்ல
தெருளுடையோன் குமாரன், உள்ளத் திச்சை யாவும்
செய்துமுடித் திடவிழைவோன் திறற்ச காயன்,
சருவமுந்தன் மயமாகக் கண்டு தேறிச்
சாட்சியுமா நிற்பவனே சன்மார்க் கத்தோன்
மருவுமிந்த நால்வர்களும் குமாரர் என்றே
வகுத்துரைப்ப(து) எம்மதுநூல் வழக்க மாமே 76

தொல்லுலகில் எச்சமயத் தெவர்க்கெவ் வாறு
தோற்றுகின்ற மூர்த்திகளும் தூய தாய
நல்லுணர்வால் ஆராயிற் குமாரர் என்றே
நவில்வதற்கு ஞாயமுண்டு, நாசம் இல்லா
வில்உருவப் பரம்தன்அருட் சத்தி யோடு
மேவியப்பால் உருவமொடு விளங்கும் பண்பால்
புல்லும்அகல் பூமிக்குக் குமரன் ஆமேல்
புகலுமவர் எவர்அதற்குப் புறம்பா வாரே 77

நந்தையே மகனாகப் பிறப்பான் என்னச்
சாற்றுகின்ற வழக்கொன்றும் சகத்தில் உண்டு
விந்தைசேர் குணரூபம் ஆதித் தன்மை
மிகக்காட்டும், வள்ளுவனார் வேத நூலும்
சிந்தையாற் றக்கோரைத் தக்கவி லாரைச்
சேய்உணர்த்தும் என்றுரைக்கும், செவ்வே ளானேன்
எந்தையே யென்றுரைக்கச் சைவர் நாணார்
இவ்விதத்தாற் குருபரமென் றியம்ப லாமே 78

குருவலது கதியிலையென் றுரைக்கும் சொல்லைக்
கோதென்னார் சமயமுற்றும் கொள்ளும் எம்மைத்
திருவருளுக்(கு) அயலாமென் றிகழ்வார் உண்டோ
சிசுவருந்தக் குறியில்வடுச் செய்கின் றோரும்

வருகுரவன் பிறர்வதைப்ப மாண்டான் என்னும்
வம்பர்களும் ஒப்பலன்றி, மங்கை நல்லார்
தருசுகமே மிக்கதென்போர் தாமும், பொன்முன்
சதமகனுக் குரைத்ததென்னுந் தகையுள் ளோரே 79

ஒருவேதத்(து) ஒருஞாயந் தன்னைக் கைக்கொண்(டு)
ஓதுவமற்(று) யாவும்இகழ் உணர்வி னேரும்
அருள்வாழ்வு பெற்றுவக்கும் உலகத் தோங்கும்
அனந்தவே தப்பயனும் ஆமென் றெப்பி
மிருகாதி களைவதைத்துண் பதனை மூட்டும்
மிகுபிழையா மென்றிகழ்வேன் வீணு வேனேல்
சருவாதி காரமும்பெற் றுள்ள தெய்வத்
தத்துவமொன் றுயர்ந்ததென்லை தவறும் அன்றே 80

அவ்வவர்தம் எண்ணம்போற் றொண்டர் யார்க்கும்
அருள்புரியத் தகும்பெருமான் அகிலந் தன்னில்
இவ்வறிவு தோற்றுமட்டும் திருத்தி ஆண்டான்
இகபரசா தனத்தின்இச்சை இசையச் செய்தான்,
தெவ்வடரும் வடிவேற்கைக் குமாரன் என்னத்
திருவுருக்கொண் டென்னதுபுன் சிந்தை பூடுற்(று)
எவ்வளவோ ஞாயங்கள் பகர்ந்தான் முன்னின்
றிடும்நாள்வந் தாற்றெரியும் எனது மாண்பே 81

•

வானுமற்றைப் பூதங்கள் நான்கும் ஆகி
வருக்குமிவை யல்லாத மயமும் ஆன
கோனுளனென் றுணர்ந்து குக னாகி நாடிக்
கும்பிட்டேன் அவனுகிக் கூறத் தக்க
வேனுறுமூர்த் திகள்பலவும் ஆகி யென்றன்
வேடமொடும் சிலகாலம் விளங்கி னுனல்
யானுமதென் றுரைக்குமட்டுந் தெளிந்தேன் அல்லால்
யானேயென் றிடும்இறுமாப் பெய்தி லேனே 82

சதுர்வேத சித்தாந்தந் தன்னில் உள்ள
சட்சமயத் தெய்வமுமாய்த், தள்ளொண் ணாத
பொதுஞானக் குரவனுமாய்ப், பலவா றுய
புறச்சமயத் தேவருமாய்ப், போக மோட்சம்
இதுதான்என் றுணர்த்தி யென்னுள் நிற்கும் தெய்வம்
யாதுகொலோ? அதனையன்றி யில்லை தெய்வம்
எதுவேனும் வேறுதெய்வம் இருக்கு மானல்
இப்பொழுதே தலைவெடிக்கும் எழுகூ றுயே 83

தெய்வமிக மேலெனமுன் ஔவை சொன்ன
திருமொழியின் பயனுளத்திற் றிகழ்ந்த பின்னர்
பொய்வழக்க ரானசில சமயத் தோர்மேல்
புறங்கூறி னலும்அவர் போற்றும் தெய்வம்
உய்வளிக்கத் தக்கதல்ல என்னப் பேசா
உணர்வுற்றேன், கௌமாரம் ஒப்ப வாயே
சைவவயி ணவகாண பத்தி யாதிச்
சமயமிரு மூன்றினையுந் தழுவி னேனே 84

**மனத்தின் இயல்பு.**

மூர்த்திசா ரூபம்இந்த வுலகில் உள்ள
முனிவர் சித்தர் ஆதியர்கள் முன்பிற் காட்டிக்
கீர்த்திசந்தி ராதித்தர் உள்ள மட்டும்
கிருட்டிணன்போற் பெறுமாறு கிடைக்கு மென்னக்
கார்த்திகைசேய் சொல்லியபின் சிவனும் மாலும்
கணநாதன் ஆதியரும் கழறி னர்கள்
வார்த்திகநா யனையமனம் அவற்றைச் சற்றும்
மதியாமற் பொறிவழிபோய் மாழ்கிற் றன்றே 85

**இந்நூலைப்பாராட்டற்குரியார் இவரெனல்.**

செம்புவெள்ளி பொன்இரும்பு வங்கம் போலும்
தெய்வம்இன்றென் றுழைத்துழலும் சிறியோர் கேட்டு
நம்புவதற் காஇவைநான் கழற வில்லை
நாமகட்குத் தெரியுமிந்த ஞாயம்; பூவில்

அம்புவியிற் கலிபுருடன் வயதொன் றுயிற்(று)
அவன்பருவ முதிர்ந்தாலும் அரியூன் றின்னும்
இம்புள்நிகர் மாதவத்தோர் ஏக தேசம்
செனித்திடல்உண்(டு) அவர்உவப்பில் நிளைக்க வென்றே 86

கலிபுருடன் வயதொறுநூ றுய போதும்
கற்கிமுகத் துடன்ஒருவன் கைவாள் ஏந்தி
வலிமலிபா தகர்குலவேர் அறுப்பான் என்கை
வருகாலம் நுவல்பனுவல் வார்த்தை யன்றோ
ஒலிதரு மாதவர்காலத் தினுக்குள் அஞ்சார்
உமைகணவன் பதத்தில்அதற் குரியோன் மாய்ந்தான்
புலியதள்வாய் தருமவனும் சித்தன் கண்டீர்
புண்ணியபா வமுந்தவத்திற் பொன்றிப் போமே 87

அறுசமயத் துளமூர்த்தி அனந்த பேதம்
அவற்றில்ஒவ்வொன் றினுக்கும்அவ்வா றுரு மென்கை
இறுதியிலா மறையாதி நூல்கள் கூறும்
இயம்புமவை யுடையாரும் ஏற்றுக் கொண்டார்
மறுவில்சம்பு பட்சம்அணு பட்சம் என்னும்
வழக்குமுண்(டு) இவ் வகையனைத்தும் மதித்து நோக்கில்
உறுதியுடன் உபாசிக்கும் உயிர்க ளெல்லாம்
உரியதெய்வ வடிவாதல் உண்மை யாமே 88

சொந்தமென ஒருமூர்த்தி தன்னைக் கொண்டு
சொல்லியமற் றவற்றையிகழ் துடுக்குத் தன்மை
எந்தவிதச் சமயிகட்கும் முதலில் உண்டாம்
எதிர்காணல் வேண்டிமுயன் றிளைப்பா ருகில்
அந்தவகை யத்தனையும் அதுவாய் அப்பால்
அனைத்தும்ஒரு பரமேயென் றவிரும் அந்நாள்
தந்தமது மூர்த்தியுருத் தாமே யான
சரதம்வெளி யாய்ப்பொதுவாந் தகையுண் டாமே 89

பத்தியெனும் வித்தினிடை ஞான மென்னும்
பயிருண்டாய்ச் சித்திமுத்திப் பலங்கள் நல்கும்
இத்திறமை தவமுதிர்ந்தோர்க் கன்றி மற்றோர்க்(கு)
இசைந்தாலும் விளக்கமுறா(து) ஈசன் வந்து
புத்தியினுட் கட்டுணலே ஞான மென்னப்
பொருவில்புகழ் வாதவூர்ப் புனிதன் சொன்னான்
சித்தியவன் தானுதல் முத்தி யின்னம்
செனியாது வாழ்வதென்கை திண்ணந் தானே 90

தானும்அ(து)என் றுள்ளபடி யறிந்த ஞானத்
தவத்தோரும் சிலநிமித்தம் சனிப்ப துண்டு
நானும்அ(து)என்று அவர்கள்உரை யாவிட் டாலும்
நடையுணர்த்தும் சொல்லுணர்த்தும் ஞாலத் துள்ளார்
வானுலகுக் கேகிடல்போல் அவர்கள் ஈண்டு
வரலும்உண்டென் றளவில்பல வகைநூல் சொல்லும்
தேனுறழ்முத் தமிழ்விரகன் முதலோர் சாட்சி
செனித்தாலும் புகழ்க்கடலிற் றிளைப்பார் அன்றே 91

பத்தியினில் வரகுணன்போல் உயர்ந் தோரில்லை
பாருலகும் வானுலகும் பரவு மேன்மைச்
சித்தியினில் தேவகிதன் மகனே மிக்கோன்
செனியாமற் சிற்பரத்திற் சேர்வ தாய
முத்தியினில் வாதவூர் முனியே மேலோன்
முழங்குதமிழ்ப் பாவலங்கல் மொழிந்து சூட்டும்
துத்தியத்தில் அருணகிரிப் புலவன் தக்கோன்
சொல்லுமிவை நான்குமொன்றுய்த் தோய்ந்தா ரின்றே 92

குன்றாரும்பே ரகங்காரப் புலவர் ஆண்மை
குலைந்துநிலை தடுமாறக் கூறும் நூலில்
நன்றறிவார் களிற்கயவர் செல்வ ரென்ன
நவின்றமொழிப் பயன்நிசமே ஞானம் உள்ளார்

மென்றகைதோய் முலைமடவார் தம்மைத் தோயும்
வேளையினும் மரணமெண்ணி மெலிவார் மற்றோர்
அன்றழிக்கும் சேற்றுமம் வந் தீர்க்கும் போதும்
அருமைமகன் பாலும்உண்மை அறைந்தி டாரே 93

மேனிலைத்தொல் சீருணர்த்துந் தன்மை தாய
வியன்திருவா சகப்புலவன் விளம்பு மாறு
ஞானிகட்கெல் லாவுயிரும் புதல்வ ராமால்
நலம்விளைத்துத் தீங்கொழிக்கை ஞாய மாகும்
நானிலம்பொய் யெனப்பிதற்றி உண்டு தூங்கி
நடந்(து) இறந்தான் எனப்பலபேர் நவிலச்சென்றால்
வேனிருபன் றன்னிலுந்தாழ் வாவ தன்றி
விரும்பியவா பெறும்வீடும் வெறும்வீ டாமே 94

உடலாதி ஒருமூன்றும் குரவற் கீந்தால்
உபதேசம் பெறலாமென் றுரைப்பார் பல்லோர்
இடல்போலும் பெரியநிலை மற்றொன்றில்லை
இந்தவிதம் அநுபூதி இசைந்தால் தோன்றும்
அடல்வேழ முகன்குகன்ஆ தியதே மாரர்
ஆரேனும் ஒருவர்உரு வதனை நாடி
விடல்வேண்டும் அத்தனையும் ஒருங்கு விட்டு
மிகத்துதித்தால் அதுதனக்குள் மேவும் அன்றே 95

சகுணபர நாட்டம்எளி தாமென் றெண்ணித்
தள்ளிவிட்டால் மோசம்வரும் சரதம் சொன்னேன்
முகுளமலர் வாவியரு(கு) அமுதன் றுய்ந்தோன்
மொழிந்தனஎல் லாம்பரமன் முக்கட் சீரும்
பகுகனல்வாய்ப் பாம்பணியும் சூலமாதிப்
பல்பொருளு மே, அவன்தான் பரத்துட் போங்கால்
வெகுமனிதர்க்(கு) அப்பேறே அமையச் செய்தான்
வேற்றுநிலை யோர்எவர்அவ் விதம்செய் தாரே 96

உருவபர நாட்டமுற்றும் சமய வாதத்(து)
 உள்ளனவே யெனவும், அவை ஒன்றும் தோயா
அருவநிலை ஞானிகட்கே யெனவும் சொல்வார்
 அதனில்இதுண்(டு) இதனில்அதுண்(டு) அறையக் கேண்மோ
செருவமுறு பார்த்தன்அடி பட்ட வேடக்
 கிழவன்எங்கும் நிறைந்திலனோ கிறிக்காமக்கா
பொருவுசிலர் பகர்அருவம் நிறைந்த தாகிற்
 பொய்த்தேவர் உண்டெனவும் புகல்வார் கொல்லே 97

யாவருக்கும் ஒருபொதுவாய் எங்கும் மேவி
 இருக்கும்அந்தப் பரம்பொருள், மெய் எவரெவ்வாறெங்(கு)
ஆவலுற்று நாடிடினும் தவமே லிட்டால்
 அவர்க்கவ்வா றருள்புரியும், அகிலத் துள்ள
சீவருக்கு நலஞ்செய்வார் முத்திப் பேறும்
 தீங்கிழைப்பார் விழும்நரகும் திருப்பி டாதால்
தாவரத்தொன் றினைச்செகுக்கும் அதற்கும் ஒப்பாத்
 தவத்தோரை அதுஎனும்சொல் தவறா காதே 98

பாவபுண்ணி யங்களெனும் வினையிற் றோய்ந்து
 பலவாறு சுழலும்உயிர்ப் பகுதிக் கெல்லாம்
சீவன்முத்தித் திசையடைந்து பிறவா முத்தி
 சேர்வதற்கு மேலான செல்வ மில்லை
ஆவதுபெற் றிடற்கனந்த முயற்சி சொல்வார்
 அவற்றினுக்குள் அருளொன்றே அதிக மாகும்
தேவர்தம்ஊர்த் தலைவாழ்வும் கசக்கும் சிந்தைச்
 சீரியர்க்கே இந்தவுண்மை திகழும் அன்றே 98

முன்னைமறை யாதியநூற் றொகுதி யாவும்
 மொழிதருமெய் ஞானத்தின் முடிவே தென்னில்
தன்னையறிந் ததன்பின்னர் தலைவற் கண்டு
 சார்ந்தருள்பெற் றுடன்கலக்கும் தகவே யாகும்

மின்னனைநிகர் இடையார்க்கும் இதுவே ஞாயம்
விளம்பும்இவற் ெருருபாதி மேவி வாடும்
என்னையுமோர் பொருளாக மதிக்கின் றேரும்
இருப்பார்என் றேதுணிவுற் றியம்பி னேனே 100

ஞானகாண்டம் முற்றிற்று

---

**அறுசீர்க்கழிநெடில் ஆசிரிய விருத்தம்**

தேன்றுளிக்கும் மலர்சொரிந்து திருவாரா தனம்புரியும் சிறப்புநல்கும்,
வான்றுதிக்கும் பெருவாழ்வும் மக்த்தான சித்தியெட்டும்மருவச் செய்யும்.
தோன்றுபவும் தோன்ருவுந் துகளில்பரம் பொருளாயசூட்சம் காட்டும்,
மூன்றுவகைக் காண்டத்தால் முடியுமிந்தக் கவுமாரமுறைமை நூலே.

**கௌமாரமுறைமை மூன்று காண்டம் கவி 300**

**வேலும் மயிலும் துணை.**



உ

குருவே துணை

## 2. பக்திகாண்டம் - குறிப்புரை.

1 தெளிந்த என்பது, கடவுள் பல என்ற மயக்கமின்றி, ஒன்றே என்ற றிந்த உறுதி.

2. கருமபலம் – செய்யும் தொழிலின் நன்மையும் தீமையும், அதற் கேற்ற பயன்தரும் கடவுள், இதற்கு வேறு வேண்டாமென்ற கருத்துடையவர்கள் கருமபரவாதிகள் எனப்படுவர். தாருகவனத்து முனிவர் அந்நிலையினர். செய்யும் தொழிலுக்கேற்ற பயனை நல்கும் கடவுள் – ஒருவன் – உண்டு என்று – நம்புவது – சிறந்ததென்பதாம்.

3. சரியை, கிரியைகளைத் தூய முறையிற் செய்வதோடமை யாமல், மனதில் பாவனையுடன் செய்யவேண்டு மென்பதாம்

4. மந்தணம் – ரகசியம். மறைமுகமாயுள்ள உண்மை.

6. மீயிருந்து – மேலிருந்தபடியே, மேலான அகண்ட அனுபவமுடைய வராயினும், அடிப்படையில் உருவத்தியான த்தின் மூலமாகவே அதையடைய முடியுமென்பதாம்.

8. குருவடிவை – சகள வடிவை என்றும், சற்குரு நாதன் திருவுரு வத்தை என்றும் கொள்க.

9. உபாசனைக்குரிய வடிவத்தை, சூரியவட்டத்துள் அமைத்துத் தியானிப்பதால் பயன் எளிதில் கிடைக்குமென்பதாம்,

10. தெய்வ உபாசனையால், பலித சித்திபெருதவர்கள், பெற்றது போலப் பேசுவார்கள், ஆனால் சாதாரண, யானை, வேடர், சேவகர் போன்றவர்களது அச்சுறுத்தல்கட்கும் அஞ்சுவர். ஆகவே சித்தி பெற முயலவேண்டுமென்ருர்.

18. சுந்தர மூர்த்தி உருவ உபாசனையினர். திருஒற்றியூர்க் கோயிலுள் இருந்த சிவபிரானை மகிழடியின் கீழ் வரச்செய்தார். அருவ அனு பவமுடைய தாயுமானுர் போன்றவர். தூல தேகத்தையும் இடைக் காலத்திலேயே இழக்க நேர்ந்தனர் என்பதால், உருவ நாட்டத்தின் உறுதியும், உயர்வும் கூறியதாம்.

18. அக்கிரகண்ணியமான – மிகமேலான நுண்ணறிவினராற் கொள்

ளற்குரியது. குரவன் – முன்னிலேப்பட்டு உபதேசித்த குருநாதன்

19. ஒரு குறியில் - குறிப்பிட்ட ஒரு வடிவத்தில்

22. கனகமுதலாம் பிரதி பந்தம் – பொருள், உடல் நோய், உற்ருர் முதலியோரது பகை இதுபோன்றவை, உபாசனேயோருக்கு மனச் சஞ்சலத்தை விளேக்கும். அதில் மயங்காமல் திடமாக உபாசனே யைப்பற்ற வேண்டுமென்பதாம்.

27. விகற்பம் – ஆறுசமய மூர்த்திகளின் உருவ வேறுபாடு மந்திர வகைகளாம்.

29. சூரியர்கள். 12. ஒவ்வொரு மாதத்துக்கும் ஒவ்வொரு சூரியர் என்றும் பெயர்கள் வெவ்வேருகவும் கூறுவது வரலாறு. இருப்பினும் பொருள் ஒன்று.

32. கண்ணன் பாரதப் போரில், சைத்ரதனேக் கொல்லும் பொருட்டு அருச்சுனன் செய்த சபதத்துக்காகப் பகற்போதில் சக்கரத்தால் சூரியனே மறைத்து இரவை உண்டு பண்ணிய செய்தி.

35. குந்தலத்தரசன் மகளான குந்தி, சூரியனது மந்திர பலத்தால், சூரியனே நாயகனுகப் பெற்றுக் கர்னனேப் பெற்றனள் என்பதாம்

38. மறைக்கிழவன் - பிரமன். நால்வர்–பிரமனது புதல்வரான, சனகர், சனற்குமாரர், சனந்தரர், சநாதனர், என்பவர்கள்.

40. ஆகண்டலாதியர் - தேவேந்திரன் முதலாகிய பல தேவர்கள். ஒன்பான்மாகண்டம் - பாரத பூமி ஒன்பது பங்குடையது. பரதன் என்ற அரசன் தனது ஆண்மக்கள் எண்மருக்கும் பங்கிட்டுத் தந்து, கடைசியான ஒரு பங்கைப் பெண் சேய்க்கு, தென்புற மாக ஒதுக்கித்தந்தான் என்பது வரலாறு. ஆதலால், தென்னுடு கன்னி நாடு என்ற பெயர் பெற்றது. பின்பு மீனுட்சியின் ஆட்சி ஏற்பட்டு மேலும் சிறப்புற்றதென்பர்.

43. 44. வயிரவருக்கு, மது, மாமிசம் படைப்பது கேடுதரும் என்பதை விளக்க, வடையும் தேனும் படைப்பவர் பகையை விலக்குவான் என்ருர். வெறிநீர்-கள், சாராயம், இவை படைப்போரை-வீணர் என்றும் கூறிய தறிக.

45. பீசங்கள் – மந்திரங்களுக்கு முன் கூறும் நம யம், சம் – கம், ஐயும் கிலியும் என்பன போன்றவை, அவை மந்திரங்கட்குத் துணையா யிருந்து பயனளிப்பதாகும்.

48. உருவபாவனே - தாயின் முலேப்பாலே நுகர்வது போல என்பதும்,

அருவபாவனை - தந்தை மார்பின் தனங்களைப் பற்றிப் பாலருந்த முயல்வதும் போல என்பதும் உவமையாகக் கூறி எளிதில் இரண்டின் தகுதியை அறியக் கூறிய நயமறிக.

50. பண்டாசுரனென்பான், திருமாலின் பகைவரான ராவணன் சோமுகன் போன்றவர்களைப் போலப், பத்து மாய வடிவங்களைக் கொண்டான். அவ்வமயம் தன் கைவிரல்களை உதறிப் பத்து விரல்களிலிருந்தும் தசாவதாரமூர்த்திகளை உண்டாக்கி அவ்வுருவங்களை வென்றாள் உமையவளென்பது வரலாறு.

51. நீசர் உணவு - மது, மாமிசம். எனவே தூயோர் அதை உண்ணார் என்பதை அறிவித்தவரும்.

52. உலகு ஓராயிரம் கோடி - உலகில் வாழும் பலவிதமான உயிர்க் கூட்டங்களாம். அவற்றைத் தோற்றுவிப்பவள் தாயான உமையவள் தன் சேய்களைக் கொல்லவோ, அவற்றின் ஊனை அருந்தவோ தாயுள்ளம் இசையாது என்றதாம்.

58. கவிராசபண்டிதர், சௌந்தரிய லகிரி என்ற வட நூலின் மொழி பெயர்ப்பாக, தமிழில் உமையவளது பரத்துவத்தைச் செய்ததற்காக, ஆறுமாதம் அவரது மகள் வடிவில் வந்து காசி போய்த் திரும்பும் வரை, சமையல் செய்து உணவருத்தினாள் என்பதாம்.

78. மூர்த்தி வடிவங்கள் பலவிதமாக இருப்பினும் அவையாவும் உபாசகன் மனத்தாற் கற்பிக்கக் கூடியவையே. சற்குரு வடிவம் நேரே கண்டதாம். கண்டவுருவை மனம் எளிதிற் பற்றும். குருவடிவ நாட்டம், பக்குவமில்லார்க்கு மனிதபாவனையை உண்டு பண்ணும் எச்சமய மூர்த்தி வழிபாட்டையும், மந்திர உபதேசத்தையும் தரும் குருவடிவ நாட்டமே உயர்வென்பதாம்.

80. உரும்ஏறு - பேரிடி.

82. மந்திரசெபத்தையே, லட்சியமாகக் கருதி மனமடங்குதற்குரிய தியானத்தைக் கொள்ளாமலிருந்தாலும், மந்திரச் சொற்களை அமைதியின்றிச் செபித்தாலும் சொற்பப் பலனே எய்தும் என்பதும் தெய்வ வடிவத்தைக் கண்முற் கண்டால் பிறவி தீரும் என்பதும் கருத்து.

96. சங்கராசாரியர் - சண்மதங்களையும் சமமாகப் போற்றிய சமரச ஞானமுடையவர். மற்றையோர் ஒருசமயத்தை வளர்க்க முற்பட்டவர் இராமாநுசர் மட்டும் வைணவத்தில் வடகலை - தென்கலை என்ற இருபிரிவை. வளர்த்துப் போராட்டத்துக்கு இடமாக்கினார் என்றார்

## 3. ஞான காண்டம். குறிப்புரை.

5. ஞானநிலை கைவந்ததாக வாயளவிற் பேசுவோர், அரசன் ஆதி பரைக்கண்டு அஞ்சுவார்கள். பெண்ணாசையால் மயங்குவர். அது எத்தகையதென்றால், நாடகத்தில் தேவேந்திராதியர் வேடமிட்டு நடிப்பவன் ஒருவன் அதற்கிசையப் பேசுவான். பின்பு உண்டி யாதியவற்றிற்காக யாசித்துப் புலவனென்று கூறி வாழ்வான் அதுபோல என்று கூறியதறிக.

11. அபரோட்சஞானி - உபாசனையின் அனுபவமுடைய மெய்யறிஞர்.

12. பாத்திரம் – "திரிவித உலகத்து அரிதொரு ஞானி என்ற வாக்கியம்

15 சரிபாதி - 'நான் கும்பிடும் போது அரைக்கும்பிடு ஆதலால் நான் பூசை செய்தல் முறையோ என்ற தொடர்.

16. பரோட்சம் - பிரமத்தைக் கண்டமென அறிதல் - சூனியம் – உருவ மற்றது(பாழ்) என்றிருத்தல்.

17. கடலின் அங்கமாக - அலை-திவலை முதலியன இருப்பினும் அதுவே கடலன்று எல்லாம் சேர்ந்ததே கடல். அதுபோல, பரம்பொருளி டத்தே உலகப்பொருள்யாவும் காணப்படும். ஆனால் இவை கடவு ளல்ல உலகம், உயிர் இவை கடவுளுக்குரியன. முதல்வன் இறைவன் உடலையே அபிமானிக்கும் உயிரை, கடவுளென்பவர், இறைவன் உயர்வினையும், உயிரின் எளிமையினையும் அறியாதவரே

18. யாம் பராசன் மகன் - வேதவியாசர், சூத்திரம் - பிரம சூத்திரம். தானே பிரமமான பரம் பொருள் நான் என்ற என்றபடி.

19. நிரையம் - நரகம்.

21. கானம் - செக்கு. இது கருங்கல்லாலும் மரத்தாலும் அமைந்து இருக்கும்.

23. கண்ணுடைவள்ளலார் - சரியை கிரியையிலீடுபட்டு அநுபூதி பெற் றவர் - அனுபூதி கைவந்தபின் அதனை விட்டனர். தன் பூசைப் பெட்டகம் ஆற்றில் மிதந்து வரப்பெறும் அளவுக்கு முதலில் சிவவழி பாட்டில்ஈடுபட்டவரென்பதாம்.

24. திருச்சிற்றம்பல நாடிகள், தமது சீடர் அறுபத்து நால்வரை, ஒரே காலத்தில் முத்தியிற் சேர்பித்தார். அவருள் ஒரு சீடர், தில்லையில் இவராணைப்படி தங்கியிருந்தார். குருநாதர் முத்திபெற இருக்கும் நிலையை நடராசர் அறிவிக்க; அத்தினத்தில் வந்து கூடினர். இத்த கைய குருவை அடையப்பெற்றோர் வேறாக ஒரு கடவுள் வடிவை

நியானிக்க வேண்டாம், கடவுளுக்கு ஒப்பாவார் அவர் என்பதாம்.

31. கோசிகன் - விசுவாமித்திரர், தனது சீடனாகிய திரிசங்கு என்பான், புண்ணியப் பயன் தீர்ந்தவுடன் வானத்திலிருந்து மீண்டான். அவனை அந்தரத்திலேயே நிற்கவைத்து ஐந்து நட்சத்திரங்களைப் பெயர்த்து ஒதுக்கி சொர்க்கம் ஒன்றைப் புதிதாக உண்டாக்கியிருக்கச் செய்தனர். அத்தகைய தவம் கைவந்த பின்னும் பிரமத்துவம் அடையாமலிருந்தார். பின்பு வசிட்டர் வாயால் கூறியபின் சுகப்பிரமர், கிளி வயிற்றிலிருந்தும் வெளிப்பட்டார் என்பது வரலாறு. தவத்தின் பெருமையும், வாயளவில் பேசும் வேதாந்திகள் பெருமையும். பிரம

33. நிலையும் 'கூறியதாம் ஐயப்பட்டாதகத்துள் உணர்வாரை' என்ற குறள்

37. வேலனைய கண்ணாள் – நளாயினி. ஏழுநாள் வரை சூரியன் வெளிவராமலிருக்கச் செற்றாள் என்பது வரலாறு. பசுமா – பச்சைக் குதிரை. இவை சூரியன் தேரிலுள்ள ஏழு குதிரைகளாம்.

38. பரம் பொருள் உருவமாகத் தோற்றினால் அதன் நிலைக்குத் தகுதி குறையுமென்பர் சிலர். அது சன்னி சுரம் தீர விரும்பி மருந்து நுகர்பவன், புளியைக் கையால் தொடாமல் வாயால் புளியென்று சொன்ன அளவிலே. பத்தியப் பிழையுண்டன்று சொல்வதோடு ஒக்கும் என்பதாம்.

39. எல்லையிலா - - இசைபெற்றோன் - கண்ணபிரான். சீரியோன் – திருவாரூர் தட்சிணா மூர்த்தி சுவாமிகள். கூறினோன் – திருண்ணாமலை குகை நமச்சிவாயர்.

45. வங்கு – நாய்க்கு வரும் நோய் பிரமம் என்ற சொல், உலகப் பொருள் எல்லாவற்றிற்கும் தொடர்புடைய தென்பதாம்.

46. பௌவம் – கடல். பண்புடையார் – உலக மக்கள், பாச பந்தத்தில் உழல்பவர்கள்.

49. மேலோர் – தாயுமானூர்

52. கண்ணபிரான், தான் பிரமசாரி என்று சொல்லி, ஒரு சேய்பிழைக் கத்தொட்டான். தான் பல கோபியரிடத்தும் இன்புற்றான். என்பது செய்தி. அதுபோல, மேலோர்களது நிலையறியாமல், பிறரும் போலியாகப் பேசுவது தவறென்பதாம்.

61. கன்னடியன் ஒருவன் தண்ணீர்க்கால் உண்டாக்கத் தவஞ் செய்து அகத்தியரைக்கண்டு, அவராணைப்படி வந்த பசு சென்ற வழி

போய்நீர்க் கால்சமைத்தான், என்பதால் தவஞ்செய்தால்அதுபோல எவரையும் காணலாம் என்பதாம். இதனுல் அகத்தியரே இருந்து தோன்றினுர் என்ருலும், திருவருள் அவன் பாவனைப்படி அகத்தியராக முற்பட்டது என்ருலும் சரியேயாம்.

62. புராண வரலாறு தூல இலக்கணமும், உள்ளுறை திருவருள் அவ்வப்போது, தோன்றிச் செய்யும் ஆடலும் ஆம். உபாசகர்கள் மீது தன் கலையை விடுத்துச் செய்வதுமுண்டு. அத்தெய்வமாகவே அவர் பாராட்டப்பெறுவார்கள்.

70 பஞ்சவிடயங்கள் – ஐம்புலன் நுகர்ச்சி.

72. ஏமகிரி – மகாமேரு. (பொன் மலை)

77. வில்உருவப்பரம் – ஒளி வடிவான கடவுள்.

79. பொன் – வியாழன். உலகாயதமதத்தைப் போதித்தவனென்பார்கள்

86. அரிஊன்தின்னும் சிம்புள்– சிங்கத்தைக் கொன்றருந்துகின்ற சரபம் எனவே இந்த நூல் உலகம் உள்ளவரை நிலவும் என்பது ஆசிரியர் கருத்தாகும்.

95. அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை விடல் வேண்டும். வேண்டிய எல்லாம் ஒருங்கு. திருக்குறள், அக்கருத்தையே இங்குக் கூறுவதறிக.

98. அது - பரம் பொருளோடு ஒப்பாகக் கூறும் முறை.

100. என்னையும் என்பது தன்னையும் குருவடிவாக எண்ணி நம்பித் தொண்டு செய்து தியானிப் போரும் இருப்பார் என்பதாம். இந்தக் கௌமார நூல் கூறும் உண்மைகளைப் பெருந்தவத்தால் இடையருத் தியான சிந்தனை யாலறிந்து, திருவருள் விளக்கத்தைத் துணை கொண்டு இயற்றினுர். உபாசகன், தவத்தினரைப் பொதுவாகத் தெய்வ வடிவமாகப் போற்றுவது மரபு. அரிய அநுபூதிபெற்றுத் தன்னையும் தலைவனையும் உணர்ந்த ஞானமெய்தியிருந்த பெரியோர்களை அன்பினர் குருவடிவாக வணங்குவர் என்பதாம்.

---

உ

குருவே துணை

# பாடல் முதற்குறிப்பு அகராதி.

அ



ஆ



இ

ஒ



ஓ



ஔ



க



கா

கு



கொ



கோ



ச



சா



சி

சீ



சு



சூ



செ



சை



சொ



ஞா



த

பூ



பெ



பை



பொ



ம



மா



மி, மு

# பிழைத் திருத்தங்கள்.

| பக்கம் | பாட்டு | பிழை | | திருத்தம் |
|---|---|---|---|---|
| 1 | 1 | நாடுநன் | — | நாடுநர் |
| 3 | 1 | வாண்மை | — | வண்மை |
| ,, | ,, | சகத்தொ | — | சகத்தோ |
| ,, | 9 | சிரமம் | — | சிரம |
| ,, | 10 | தவனை | — | வதனை |
| 6 | 13 | நறி | — | நரி |
| ,, | 14 | வதும் | — | வதுவும் |
| 8 | 19 | யோடு | — | யொடு |
| 9 | ,, | கௌமர | — | கௌமார |
| ,, | 25 | வயிறிற் | — | வயிற்றிற் |
| 13 | 36 | வழங்கல | — | கழங்கல் |
| ,, | ,, | நிலயம் | — | நிலையம் |
| ,, | 37 | குமாாரன் | — | குமாரன் |
| 16 | 47 | தொடை | — | துடை |
| 19 | 55 | துணித்து | — | துணிந்து |
| ,, | 57 | இரைத்து | — | இறைத்து |
| 20 | 61 | ஆரதித் | — | ஆராதித் |
| 21 | 62 | பெ்ற | — | பெற |
| ,, | ,, | ஷி | — | ஷி |
| 22 | 65 | ஞனும் | — | ஞலும் |
| 25 | 75 | ஒணஞ | — | ஒண்ஞ |
| 26 | 79 | வ்தை | — | வதை |
| ,, | 80 | றிவ்வை | — | இவ்வை |
| 37 | 86 | டமிப்பா | — | டமிழ்ப்பா |

| பக்கம் | பாட்டு | பிழை | | திருத்தம் |
|---|---|---|---|---|
| 32 | 100 | தகைடி | — | தகை |
| 36 | 11 | விளச் | — | விளக் |
| 37 | 15 | லுய் | — | லும் |
| ,, | 17 | குறிப்பசு | — | குறிப்பது |
| ,, | ,, | யொன்று | — | யென்று |
| 38 | 21 | துவ்க்கும் | — | துவக்கும் |
| 40 | 25 | சொல்லோ | — | கொல்லோ |
| 41 | 28 | ைதயா | — | எதையா |
| ,, | 30 | புறு | — | வுறு |
| 44 | 39 | மதியும் | — | மதியம் |
| 46 | 44 | ஓர்வார் | — | ஓர்வார் |
| 47 | 47 | பகாரும் | — | பகரரும் |
| ,, | 48 | யார்பின் | — | மார்பின் |
| 48 | ,, | துர்கை | — | துர்க்கை |
| ,, | 53 | வையிர | — | வயிர |
| 60 | 86 | சின்ற | — | கின்ற |
| ,, | 87 | டுதது | — | டுத்து |
| 61 | 89 | ளிலனென் | — | ளிலளென் |
| 65 | 1 | யாகுமே | — | யாமே |
| 70 | 5 | தபால் | — | தப்பால் |
| 72 | 13 | பேருரே | — | போரே |
| 74 | 18 | பகாங் | — | பகர்ங் |
| ,, | ,, | யானும் | — | யாமும் |
| 75 | 23 | ஆற்மிளீ | — | ஆற்றினீ |
| 79 | 36 | தாகும் | — | தாமும் |
| 84 | 53 | பரமநா | — | பரம்நா |

| பக்கம் | பாட்டு | பிழை | | திருத்தம் |
|---|---|---|---|---|
| 86 | 60 | ஒலக்கம் | — | ஓலக்கம் |
| 87 | 65 | அருமைச | — | அருமைச் |
| 88 | 66 | கூடட | — | கூட்ட |
| 90 | 73 | அச | — | அச்ச |
| ,, | 74 | மொசம் | — | மோசம் |
| 97 | 97 | மொய்த் | — | பொய்த் |

